உ

கடவுள் துணை.

# திருமந்திர நூறுபாட்டுக்குரை.

இஃது

மதுரைத் தமிழ்ச்சங்கத்தில்
சைவநூற் பரிசோதகராயிருந்த
திருவாவடுதுறை ஆதீன வித்வான்

சேற்றூர்

ரா. சுப்பிரமணியக்கவிராயரால்

எழுதப்பட்டது.






"செந்தமிழ்"ப் பிரசுரம்—கரு.

மதுரை:
தமிழ்ச்சங்க முத்திராசாலைப்
பதிப்பு.
1913.

உ

கணபதி துணை.

# திருமந்திர நூறுபாட்டுக்குரை.

## முகவுரை.



அமிழ்தினு மினிய தமிழ் வழங்கு நிலத்திலே, தமிழ் நூல்களிற் சிறந்து விளங்கும் *திருமுறைகள் பன்னிரண்டுட் பத்தாந்திருமுறையாகிய திருமந்திர மென்னுநூல் ஸ்ரீ கைலாயத்திலிருந்து வந்த சிவயோகியாராகிய திருமூலநாயனாரா லருளிச்செய்யப்பட்டது; இந்நாயனார்சரித்திரம் பெரியபுராணத்துள்ளே திருமூலநாயனார் புராணத்திலே நன்கறியத்தகும். இந்நாயனார், "ஆவடுதண்டுறை யணைந் தங்கரும் பொருளை யுறவணங்கி - மேவுவார் புறக்குடபால் மிக்குயர்ந்த வரசின்கீழ்த்- தேவிருக்கையமர்ந்தருளிச் சிவயோகந் தலைநின்று-பூவலரு மிதயத்துப் பொருளோடு முணர்ந்திருந்தார்." என்றபடி திருவா வடுதுறையிற் சிவயோகத்திருந்து உலகத்தார் பிறவிவிடந்தீர்ந்துய்யும்பொருட்டுச் சைவாகமத்தின் சாரமான சரியை கிரியை யோக ஞானமென்னும் அமுதினை யமைத்து ஓராண்டுக் கொரு திருப்பாட்டாக மூவாயிரந் திருப்பாட்டைத் தொகுத்தருளித் திருமந்திரமெனப் பெயர்புனைந்த இந்நூலின் பெருமைகளை யறிந்துரைக்க இந்நூலாசிரியரைப் போலத் திருவருளைப் பூரணமாகப்பெற்ற பெரியோர்க்கே யியலுமன்றி யேனையோர்க் கியலாதாதலால், "சிவநிறைகல்விசாலாச் சிறியனே கிளக்கவல்லேன்" என்றபடி கல்வியறிவிற் சிறியயானே உரைக்கவல்லவன். அந்நூலாசிரியர் கூறிய உவமான உவமேயங்களையும், உருவகங்களையும், பரிபாடை சம்பிரதாய முதலியவைகளையுங் கண்டு பொருளுரைக்கு முயர்ந்த நாவலரிக்காலத் தரியராயிருக்கின்றார்கள். திருவாவடுதுறை யாதீனத்தில் நமசிவாய மூர்த்திக்குப்பதினைந்தாவது பட்டத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக சுவாமிகள் நன்குபொருள்கண்டு கூறியருளியதாக அடுத்த பதினாறுவது பட்டத்திலே இருவகைப்பொருளு மெவர்க்குமுதவும் பெருவள்ளலாயு மென் குலகுருவாயுமிருந்த ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் திருவாய்மலர்ந்துகூறக் கேட்டிருக்கின்றேனேயன்றி முற்றும் வழுவின்றி ஐயந்தீரப் பொருளுரைப்பாரைக் கண்டிலேன்; இங்ஙனமாகவே, இந்நூலுள்ளே நூறு திருப்பாட்டை யெடுத்

---

* திருமுறைகள் பன்னிரண்டாவன:—திருஞானசம்பந்தநாயனார்திருமுறை மூன்று, திநாவுக்கரசுநாயனார்திருமுறை மூன்று, சுந்தரமூர்த்திநாயனார்திருமுறை யொன்று, திருவாசகமொன்று, திருவிசைப்பாவொன்று, திருமந்திரமொன்று, திருவாலவாயுடையார் முதலோர்செய்த திருமுறைகளொன்று, பெரியபுராணமொன்று என்பனவாம்.

துரைசெய்யத் துணிந்தநியாதினலென்னில்? பெரியபுராணத்துள்ளே திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் புராணத்திலே திருப்பாசுரத்துக்குப் பொருள்கூறியருளிய சேக்கிழார்நாயனர் "வெறியார் பொழிற் சண்பையர் வேந்தர் மெய்ப்பாசுரத்தைக் - குறியேறிய நீர்மையறிந்து கும்பிட்டேனல்லேன் - சிறியேனறிவுக்கவர்தந் திருப்பாதந்தந்த - நெறியேசிறிதியானறிநீர்மை கும்பிட்டேனன்பால்" சிறியேனறிவுக் கவர்தந்திருப்பாத முணர்த்திய நெறியே சிறிதுயானறிந்ததன்மையால் (உரைத்து) அன்பால் வணங்கினேனென ஆணைகூறியருளினமை துணிந்து, எனக்குக்கல்விகற்பித்தருளிய "ஞானகோமுத்தி நமசிவாய-தேசிகமூர்த்தி திருவருள் இந்நாள்-என்சிற்றறிவுக்கிசைத்திடும் வண்ணம் - ஈனப்போற் சிறியரெளிதினுணர - வுரைத்தனனன்றி யீதோருரையன்றே" ஆதலாலினிப் பேரறிவுடையோரிதனைச் செப்பஞ்செய்து விருத்தியுரையாக்கி வெளியிடுமாறு வேண்டுகின்றேன். இந்நூறு செய்யுட்குங் கன்னடியர் கம்பளிச்சட்டைக் (கைலாயசித்தர் ஒருரை வரைந்திருந்தனர். அதனை நோக்கும்போது இலக்கிய விலக்கணமுறைப்படி யெழுதிய பதவுரையாகவுமில்லை, பொழிப்புரையாகவுமில்லை, கருத்துரையாகவுமில்லை, மெய்கண்ட சாஸ்திர நெறி கண்டுரைத்ததாகவுமில்லை. சிவஞானபோத முதலிய நூல்களிலாயினும், திருவாலவாய்க்கட்டளை முதலிய கட்டளைகளிலாயினும், தேவாரமுதலிய திருமுறைகளிலாயினும், காஞ்சிப்புராண முதலிய புராணங்களிலாயினும், வேதாந்த சூடாமணி கைவல்ய நவநீத முதலிய நூல்களிலாயினுமேற்கோளாக வெடுத்துக்காட்டிய செய்யுளொன்றுமில்லை. எழுவாய் பயனிலை செயப்படுபொருண் முறை விளங்கவுமில்லை. ஒவ்வொரு திருப்பாட்டினும் ஐந்தாறு சொற்களையாயினுமிரண்டுமூன்றடிகளையாயினு மெடுத்தெழுதி என்னுஞ் சத்தத்துக்கு விவரம் இன்னது என்று யாதாயினுமொன்றை வரைந்திருக்கின்றது. திருப்பாட்டுத்தோறுங் காரணகுரு கைகாட்டும்படி கர்ப்பூரமுஞ் சோதியுங் கலந்தாற்போல ஐக்கியபதம் பெற்றிருப்பதனலே என்னும் வாக்கியங்களும் வரைந்திருக்கின்றன. இவ்வேடு மதுரைத் தமிழ்ச் சங்கத்திலிருக்கின்றது. இதனைக்கண்ட செந்தமிழ்ப் பத்திராபராயிருந்த, மு. ராகவையங்காரவர்கள் முதலியோர்கள் இவ்வுரையை நீக்கிவிட்டாவது, திருத்தி விளக்கியாவது, இலக்கியவிலக்கண முறையுடன் சித்தாந்த நான்முறையாக ஒருரைசெய்து வெளியிட்டுலகிற் குபகரிக்கவேண்டுமென்று கூறிய அதனல், என் சிற்றறிவிற்கியன்றவரை நோக்கித் திருத்திவிளக்கிப் பொருளமைத்து வரைந்திருக்கின்றேன். "எப்பொருள்யார்யார்வாய்க்கேட்பினுமப்பொருண், மெய்ப்பொருள் காண்பதறிவு."

இங்ஙனம்,

**சே. ரா. சுப்பிரமணியக் கவிராயர்.**



உ

கணபதி துணை.

# திருமந்திர நூறுபாட்டுக்குரை.

பதிபசுபாசமெனப்பகர்மூன்றிற்
பதியினைப்போற்பசுபாசமநாதி
பதியினைச்சென்றணுகாபசுபாசம்
பதியணுகிற்பசுபாசநில்லாவே.

(இதன் பொருள்.) முதலிரண்டடிக்கு - பதியென்றும் பசுவென்றும் பாசமென்றுஞ் சொல்லத்தக்க மூன்றனுள்ளும் பதியினைப்போலவே பசுவும்பாசமுமநாதியேயாம்; (ஆதியன்று.) மூன்றாமடிக்கு - அப்பசுவாகிய வான்மாக்கள் பெத்த நிலைமை முத்திநிலையாகக்கொண்டிருப்பதனாற் பதியினைக் கிட்டிச்சேரமாட்டா, பாசமுஞ் சடமாகையாற் சேரமாட்டா. நான்காமடிக்கு-இனிப் பசுவாகிய வான்மாக்கள் மலபரிபாகசத்திநிபாதம்பெற்றுப் பதியினைச்சேர்ந்தாற் பாசங்களின்சத்தி நீங்கிவிடுமென்றவாறு.

இறுதியிற்கூறிய பாசமென்றது அவற்றின்வலியை; இது ஆகுபெயர். பசுவும் பாசமுமாதியெனனில், அவை யழிபொருளாமாதலா லநாதியே யென்க. அநாதியாயிருக்கிற் பாசமழியுமோவெனில், "காணலுறுசெம்பிரதகுளிகைபரிசிக்கக் கழியுஞ்செம்புருநிற்கக்கண்டாமன்றே - தாணுவின்றன்கழலடையபத்தவிருமலம்." எனச் சிவஞானசித்தியார் சுபக்கம் கக-ஆஞ்சூத்திரம் ஐந்தாந்திருப்பாட்டின் கருத்தைநோக்கி லழியுமென்க; ஈண்டழியுமென்றது பகல் விளக்குப்போலச் சத்திகெட்டு நிற்றலையாதலின் முற்றக்கெடுதலை யன்றென்க. ஆணவங் கன்மம் மாயை எனப் பாசமூன்றென்பதும், மாயேயந் திரோதானம் என்பவையுடன் பாசம் ஐவகையென்பதுஞ் சித்தியாரிற் காண்க; ஈண்டுரைப்பிற் பெருகும். பசுபாசம் என்பன பால்பகா வஃ

றிணைப்பெயராதலால் அணுகா, நில்லா எனப் பன்மைவினைமுற்றுப் பயனிலைகொடுத்துக் கூறினர். (க)

தன்னைப் பரனைச் சதாசிவ மென்கின்ற
மன்னைப் பதிபசு பாசத்தை மாசற
முன்னைப் பழமல மூலத் தைவிட்
டுன்னத்தகுஞ் சுத்த சைவ ருபாயமே.

(இ - ள்.) தன்னை - சகலராகியவான்மவர்க்கத்தை. பரனை - அதன்மேலாகிய பிரளயாகலராகிய வான்மவர்க்கத்தை. சதாசிவமென்கின்ற மன்னை - விஞ்ஞானகலராகிய வான்மவர்க்கத்தை, (உன்னத்தகும்.)—சம்புபக்க மணுபக்கமாயிருக்கிற முறையைக் கருதவேண்டும். (எனவே-சகலருக்கு ஆணவமாயை கன்மமாகிய மூன்று மலமும், பிரளயாகலருக்கு ஆணவம் மாயை யாகிய விரண்டுமலமும் விஞ்ஞானகலருக்கு ஆணவமலமொன்று முடைமையாமுறையைவிசாரிக்கத் தகுமென்பது கருத்தாயிற்று) பதிபசு பாசத்தை மாசற முன்னைப் பழமல மூலத்தை விட்டுன்னத்தகும்—இனிப் பதிபசு பாசங்களின் வியாபக வியாத்தியினிலக்கணத்தை (அறிந்து) அஞ்ஞானமாகிய களங்கநீங்க அநாதியாகிய பழையமலமாகிய வாணவமலத்தை நீங்கவிட்டு மூலமாகிய பதிப்பொருளை விதிப்படி கருதவேண்டும். சுத்தசைவருபாயமே-(இவ்வகையறிவதே சத்திநிபாதவிவேகமுள்ள) சுத்தாத்துவித சைவருபாய நிலையாமென்றவாறு.

பழமலமூலத்தைவிட் டுன்னத்தகும் என்பதைப் பழமலத்தை விட்டு மூலத்தை உன்னத்தகும் எனக் கூட்டியுரைத்துக்கொள்க. தன்னை என்றது பிரளயாகலர் விஞ்ஞானகலரிருவருமொழிந்த சகல வர்க்கத்தை யென்க. உருத்திரனையு மகேசுரனையும் பிரளயாகலரென்பர். பழமலக்கட்டினை வீட்டினை என்றும் பாடம்; இப்பாடத்திற்கு-கட்டு-பந்தம். கட்டினை வீட்டினை யென்பதற்குக் கட்டை வீட்டினையாகி என முற்றெச்சமாக்கியுரைக்க; இப்பொருட்கு உன்னத்தகும் என்பதற்குப் பதியையுன்னத்தகுமென வருவித்துரைக்க. அறிந்து என்பது இசையெச்சம். பசுவர்க்க மூன்றென்பதும், அவ்வர்க்க மும் மலங்களுடைமையுஞ் சிவஞானசித்தியார் சுபக்கம் ௨-ஆஞ்சூத்திரம் உ-ஆந் திருப்பாட்டிற் காண்க. மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் அச்

சிட்டிருக்கிற "செந்தமிழில்," மூவிகை யான்மாக்களிலக்கணத்திலுங் காண்க. (௨)

ஞானமில்லாதார் சடைசிகை நூனண்ணி
ஞானிகள்போல நடிக்கின்றவர் தம்மை
ஞானிகளாலே நரபதி சோதித்து
ஞானமுண்டாக்குதனலமாகு நாட்டிற்கே.

(இ - ள்.) நரபதி - அரசன். சோதித்தல் - உண்மைஞான மின்றோ வுளதோவென்னு மையநீங்கப் பரீக்ஷித்தலாம்; அரசன் அவ்வாறு செய்யாவழி நாடுபஞ்சமுற்றுக் கேடுறுமென்றும், அரசன் வாழ்வு கெடுமென்றும், வேடநெறி நில்லாரை அரசன்றண்டிக்கவே ண்டுமென்றும், வேடநெறி நிறுத்தல் செய்யவேண்டுமென்றும் இந் நூலாசிரியர் முன்னர்ச் சில செய்யுட்களாற் றெளிவுறக்கூறியருளின மை காண்க. ஏனையவெளி. (௩)

தன்னையறியத் தனக்கொரு தீங்கில்லை
தன்னையறியாமற் றான்கெடு கின்றான்
றன்னையறியு மறிவை யறிந்தபின்
றன்னையர்ச்சிக்கத் தானிருந் தானே.

(இ - ள்) முதலடிக்கு - சத்தாகிய ஆன்மாச்செனனமெடுத்து, "உண்டதேயுண்டு முடுத்ததேயுடுத்து முரைத்ததேயடுத்தடுத்துரைத் துங், கண்டதேகண்டுங் கேட்டதேகேட்டுங் கழிந்தன கடவுளெல் லாம்" என்றபடி பந்தமெய்தி மரணத்தையடைதலால், அவை நீங்குமா று சிவஞானபோதம் நான்காஞ்சூத்திரத்திற் கூறியவாறு தன்னியல் பைத்தான் விசாரித்துக்கொள்ள அதனாற் றனக்கொரு கேடாகிய செ னனமரணமில்லை. இரண்டாமடிக்கு - தானிவ்வகையினனென்று தன் னைத்தான்றேராமையினாலே யெல்லாத்துன்பமுந் தன்னைத் தொடரத் தான் அச் செனன மரணக்கேடுறுகின்றான். தன்னைத் தான்றேராமை என்றது ஈண்டு ஆன்ம தெரிசனஞ்செய்யாமை. மூன்றாமடிக்கு - தன்னையறியுமறிவாகிய தலைவனைத் தானறிந்தபின்பு. நான்காமடி க்கு - (தலைவனில்லாமற் றானில்லாமையினாலே) தானவனைப் பூசிக்கத் தான் அவனுடன் பிரிப்பின்றிச் சமவேதமாயிருப்பானென்றவாறு.

அர்ச்சித்தலாவது ஈண்டுச் சிவோகம் பாவனை செய்தலென்பது கருத்தாகக்கொள்க. இருப்பானென்பதனைத் தெளிவுபற்றி இருந்தானெனக் கூறினரென்க. பின்னிரண்டடியிலே "தன்னையறிந்தவன் றலைவனையுமறிவான்" என்னும் பழமொழியின் கருத்தையறிக. இத்திருப்பாட்டின் கருத்தைச் சிவஞான சித்தியார் கூ-ஆஞ் சூத்திரம் ஏழாந்திருப்பாட்டில், "கண்டவிவையல்லேனுனென்றகன்றுகாணுக் கழிபரமுநானல்லேனெனக்கருதிக்கசிந்த, தொண்டினொடுமுளத்தவன்றுனின்றகலப்பாலே சோகமெனப் பாவிக்கத்தோன்றிடுவனேரே" எனக்கூறியதனுற் காண்க. ஈண்டுவிரிப்பிற்பெருகும். (சு)

காணிப்பொன்கொண்டு கடைகடை தோறும்
வாணிபஞ்செய்து மயங்கித் திரிவேனை
யாணிப்பொன்னுன வறிவையறிந்த பின்
மாணிக்கம்பெற்று மகிழ்ந்திருந் தேனே.

(இ - ள்.) முதலிரண்டடிக்கு - சிற்றறிவாகிய காணியளவு பொன்னைக்கொண்டு, ஆன்மலாபம் பெறவேண்டிப் பொய்வேடம் பூண்ட, ஆசாரியராகிய கடைதோறுங் கடைதோறுஞ் (சென்று) தீக்கையாகிய வாணிபமுண்டாகச் செய்துகொண்டு (ஞேயத்தழுந்துநிலை கைகூடாமையினுலே) மயக்கமுற்றுத் திரிகின்றநான். பின்னிரண்டடிக்கு—உயர்ந்த பொன்னுகிய பேறறிவாகிய ஞேயத்தை (மெய்க்குருவா) லறிந்தபின் (அந்நிலைகூடினமையால்) மாணிக்கமாகிய வான்மலாபவானந்தத்தையடைந்து மகிழ்ச்சியுற்றிருந்தே னென்றவாறு.

ஐ-சாரியை, அன்றி அழகுமாம். ஆன்மலாபமாகிய வானந்தத்தை மாணிக்கமென்றுருவகஞ்செய்தார், உலகில் அதனிற்சிறந்தது பிறிதின்மையினென்க. இந்நூலாசிரியர், "சிவன்முத்தியே திகழ்பரமுத்தியே யென்ன - மேவுமுத்தியோரிரண்டினு மெவினராகி" இருந்தனராதலால் இங்ஙனம் வெளியிட்டருளினுரென்க. கடை - ஆவணம். காணிப்பொன் கொண்டு வாணிபஞ்செய்வோர் மாணிக்கம்பெற்றுற் பெருமகிழ்ச்சி யெய்துவரென்பதனை விளக்க மகிழ்ந்திருந்தேனென்றூர். இது பொன்வாணிபரை நோக்கித் தாம்பெற்ற பேறுரைத்தவாறு. இன்னுமித் திருப்பாட்டிலே மயக்கஞ்செய்விக்கும் பொய்க்குருவினை நீக்கி மெய்க்குருவைச் சேர்ந்தால் மெய்ஞ்ஞான நிலைகைவருமென்ப

தாயிற்று. "மடமையோப்புகிலார்சிலரிழிஞர்வாலறிவங், குடையர் போற்றமைத்தேற்றிமாணுக்கரையுலைத்தாங்கு" என்றபடி பொய்க்கு ருமயக்கஞ்செய்வாரென்பதும், "வீடணுகும் பெருங்காதன்மீக்கொண்டவினையொப்புக், கூடினவர்குருத்தேடிக்கொட்புறல்போற்றிசை திசைபோய், நாடுமவர்குருப்போலநடிப்பவரைவிலக்குதல்போல்" என்றபடி அவரை மாணுக்கரறிந்து விலக்கவேண்டுமென்பதுங் காண்க. (ரு)

பிட்டடித்தெங்கும்பிதற்றித்திரிவேனை
யொட்டித்துள்ளமர்மாசெலாம்வாங்கித்
தட்டொக்கமாற்றினன்றன்னையுமென்னையும்
வட்டமதொத்ததுவாணிபம்வாய்த்ததே.

(இ - ள்.) பிட்டடித்தெங்கும்பிதற்றித்திரிவேனையொட்டித்து- (சைவாகமநாற்பாதப்பொருளையும்) நொறுக்கியடித்து (உலகியற்பொருளாகிய பொய்யை மெய்யென்றுமயங்கி) அதனைப் பிதற்றிக்கொண்டுதிரிகின்ற வென்னைப்போலப் (மானைக்காட்டி மானைப்பிடிப்பதுபோலவென்னை வசஞ்செய்ப மானிடவடிவங்கொண்டு குருவாகவந்து) பொருந்தி. உள்ளமர்மாசெலாம்வாங்கி - என்னிடத்துள்ளே தங்கிய பாசங்களையெல்லாம்என்னைப்பற்றுமல் அறநீக்கி. தட்டொக்கமாற்றினன் றன்னையுமென்னையும் — நிறுக்கப்பட்ட பண்டங்களைத் தராசுத்தட்டிலே மாற்றிவைத்தாற்போலத் தன்னிடத்திலென்னையு மென்னிடத்திற் றன்னையுமாற்றி வைத்தருளினுன். வட்டமதொத்தது வாணிபம்வாய்த்ததே - வாசியொத்தாகிய வாணிபமெனக்கே கிடைத்ததென்றவாறு.

பின்னிரண்டடியின் கருத்தை "தந்ததுன்றனைக்கொண்டதென்றனைச் சங்கராவார்கொலோசதுர, ரந்தமொன்றில்லாவானந்தம்பெற்றேன்யாதுநீபெற்றதொன்றென்பால்" என்னுந்திருவாசகத்திருப்பாட்டிலறிக. உள்ளமாமாசெலாமெனப்பாடமோதி மனத்திலுள்ள பெரியமாசென்பர். வட்டம் - வாசி. வாணிபமாவது - ஈண்டு ஆன்மலாபம், அது அந்தமொன்றில்லாவானந்த மென்க. ஏ - பிரிநிலையுந்தேற்றமுமாம். இத்திருப்பாட்டின் கருத்தை, "மிக்கதொருபக்குவத்தின்மிகுசத்திநிபாதமேவுதலுஞானம்விளைந்தோர்குருவினருளாற், புக்கநட்டித்தேநிட்டைபுரிந்துளோர்கள்பூதலத்தேபுகழ்சிவன்முத்தராகித், தக்கபிரியாப்பிரியமின்றியோட்டிற்றபநியத்திற்சமபுத்திபண்ணிச்சங்கரனே, டொ

க்கவுறைந்திவரவனையவனிவரைவிடாதேயுடந்தையாய்ச்சிவன்றேற்ற மொன்றேகாண்பர்" என்னுஞ் சிவஞானசித்தியார், அ-ஆஞ்சூத்திரம், உக-ஆந் திருப்பாட்டிற்காண்க. இதுவுமேலைச்செய்யுளைப்போலவே தான்பெற்றபேறு கூறியவாறு. (சு)

உடம்புமுடம்புமுடம்பைத்தழுவி
யுடம்பிடைநின்றவுயிரையறியா
ருடம்போடுயிரினுடம்பறியாதார்
மடம்புக்குநாய்போன்மயங்குகின்றாரே.

(இ - ள்.) முதலிரண்டடிக்கு—தூலமுஞ் சூக்குமுங் காரணமு மாகிய மூவகைச்சரீரத்தையும் பொருந்தி அச்சரீரத்தில் (எள்ளுமெண் ணெயும்போலக் கலந்து) நின்ற சீவான்மாவின் றன்மையையறியாத வர். உடம்போடுயிரினுடம்பறியாதார்—உடம்பிலேயுலாவுகின்றசீவான் மாவினுடம்பாகிய பரமான்மாவை யறியமாட்டாதவராவார். மடம்புக் குநாய்போன்மயங்குகின்றாரே—(அவர் பாசத்தையுந் தன்னையுந்தலை வனையுமறியாது) அறியாமையிற்புகுந்து (பழக்கவாசனையை விடாத) நாயைப்போலச் சமுசாரபந்தத்தில் மெய்யாகவழுந்தி மயங்குகின்றாரெ ன்றவாறு.

இவாறிவிருந்தவாறென்னை என்பதெஞ்சிநின்றது. தூலசரீ ரமாவது - பூதபரிணமமாகிய விவ்வுடல். சூக்குமசரீரமாவது - புரியட் டகவுடம்பு; அது தன்மாத்திரைகளைந்தும், அந்தக்கரணங்கண் மூன் றுமாம். இவற்றைச் சிவஞானசித்தியார் உ-ஆஞ்சூத்திரம் கூச-ஆஞ் செய்யுளிற்காண்க. காரணசரீரமாவது - தன்மாத்திரை முதலிய வெ ட்டு மொழிந்தகருவிகளைத்தரு மூலப்பகுதியாகிய மாயை; இதனைச் சிவஞானசித்தியார், உ-ஆஞ்சூத்திரம், ௫0-ஆஞ் செய்யுளிற்காண்க. முதலடியில் உம்மையையும் ஐயுருபினையு மாற்றிக்கூட்டுக. நடு விரண்டடியிலே "தன்னையறியார்தலைவனையுமறியார்" என்ற பழமொ ழியின் கருத்தைக்காண்க. முதலடிக்கிவ்வாறன்றி, ஆணுடம்பும் பெ ண்ணுடம்புமாகிய விரண்டும் ஆணுடம்பு பெண்ணுடம்பினையும் பெண் ணுடம்பு ஆணுடம்பினையுமாறிச் சேர்ந்தென்றுங் கூறுவர்; இதற் கிையைய நான்காமடிக்கும், மடத்தின்கட் புகுந்து நாயானது சுவரிற் சித்திரவடிவமாயிருந்த நாயை மோகித்துச் சேர்ந்தாற்போல மயங்கு

கின்றாரென்றுரைப்பர் ; அவ்வாறு கொள்வோர் "மண்டபத்திலெழுதி வைத்த குக்கறன்னே மறித்துமொரு குக்கல்வந்து மருவினாற்போல்" என்ற செய்யுளையு முதாரணமாகக் கூறிக்கொள்வர். சீவான்மாவுக் குடம்பென்றது ஆன்மாவுக்காதார மென்னுந் துணையாய்நின்றதெனக் கொள்க. (எ)

*கண்டறி யாரிந்தக் காயத்துணந்தியை
யெண்டிசை யோரு மிறைவனென் றேத்துவா
ரண்டங்கடந்த வளவிலாவானந்தந்
தொண்டர் முகந்த துறையறி யாரே.

( இ - ள். ) கண்டறியாரிந்தக்காயத்துணந்தியை - மூவகையாகிய விச்சரீரத்துள்ளே (பாலினெய்போன் மறைந்து விளங்காதிருக்கின்ற) நந்தியாகிய சீவான்மாவை யாராய்ந்தறியார்களாகி. எண்டிசையோரு மிறைவனென்றேத்துவார் - உலகிலநேகரும் (வேதத்துளோரிடத்திலே யேகமெனக்கூறலாலதுநோக்கி யச்சீவான்மாவைத்) தலைவனென்று துதிக்கின்றார்கள். அண்டங்கடந்தவளவிலாவானந்தந், தொண்டர்முகந்ததுறையறியாரே - வரம்பிலின்பமாகிய சிவானந்தக் கடலை (அவ்வேதத்துட்கூறிய அத்விதமென்னுஞ்சொற் பொருளியல்பையறிந்த) மெய்யடியார்கள் நுகரும்வண்ணம் வாரிக்கொண்ட சன்மார்க்கத்தை யறியாதவராவரென்றவாறு.

நந்தியென்றது - சிவபிரானுக்கும், நந்திகுருவிற்கும், விடைக்கும் பெயர் ; ஈண்டுச்சீவான்மாவிற்குப் பெயராகக்கூறினார் ; எங்ஙனமெனில் "நந்தல்கேடுடனேயாக்கம்" எனக்கூறலாற், பிறப்பிறப்பென்னுமாக்கமுங் கேடுமாகிய அவ்விரண்டையுங் கொள்பவனென்னுங் கருத்தாலென்க. ஏகமென்னுஞ்சொற்பொருளியல்பையும், அத்துவிதமென்னுஞ் சொற்பொருளியல்பையுந் திராவிடமகாபாடியத்தினோர் பகுதியாகிய அத்துவிதவாக்கியத் தெளிவுரையிற்காண்க. ஏ - அசை. இது, ஏகான்மவாதிகளை மறுத்துரைத்ததென்க. ஏத்துவரென்பதில் வகரவிடைநிலை நிகழ்காலப் பொருட்டு. (அ)

---

* கண்டறி வாரில்லை காயத்தினந்தியை யென்பது அச்சுப்பிரதிப்பாடம்.

காட்டுங் குறியுங் கடந்தவக் காரண
மேட்டின் புறத்தே யெழுதிவைத் தென்பயன்
கூட்டுங் குருநந்தி கூட்டிலல் லாலது
வாட்டின் கழுத்தி னதர்கறந் தற்றே.

(இ - ள்.) காட்டுங் குறியுங் கடந்தவக் காரணம் - உதாரணமு மடையாளமுங்கடந் தப்பானின்ற வக்காரணப்பொருளை. ஏட்டின் புறத்தேயெழுதிவைத்தென்பயன் - சுவடியினிடத்தில் (இன்னவுவமா னமு மின்னவடையாளமு முளதென்று) பல பாடைமொழிகளா னெழுதிவைத்ததனாற் பயன்யாது. கூட்டுங்குருநந்தி கூட்டிலல்லால் - (ஆன்மாக்கட்குக் கருவி முதலியவற்றைக்) கூட்டியருளிய சிவபிரா னாகிய தேசிகமூர்த்தி (எழுந்தருளிவந்து மோனமுத்திரையத்தனா யிருந்துபதேசித்துப் பூரணப்பொருளாகிய தன்னுடன்) கலந்திருக்க வைத்தாலன்றி. அது ஆட்டின் கழுத்தினதர்கறந்தற்றே - அவ்வேட் டிலெழுதிவைத்தது எத்தன்மையதென்னில்? அசாகளஸ்தனத்தைப் பற்றிப்பற்றிப் பால்கொள்ளுமா றுருவிய வத்தன்மைத் தென்றவாறு.

முன்னிரண்டடியின் கருத்தை "மைப்படிந்தகண்ணாளுந்தானுங் கச்சிமயானத்தான்வார்சடையானென்னினல்லா, னொப்புடையனல்ல னொருவனல்லனோரூரனல்லனோருவமனில்லி, யப்படியுமந்நிறமுமவ் வண்ணமுமவனருளேகண்ணாகக்காணினல்லா, லிப்படியனிந்நிறத்த னிவ்வண்ணத்தனிவனிறைவனென்றெழுதிக்காட்டொணாதே." என்ற திருப்பாட்டானுமறிக. ஏ - இரண்டும் அசை. அதுவென்னு முற் றுகரமீண்டுக் கெடாது நின்றது. நந்தியென்றதற்குச் சிவபிரானெ னக் கூறலன்றிச் சிவபிரானுக்குங் குருவுக்கும் வேறுபாடின்மையால் இந் நூலாசிரியர் தம்முடைய ஆசாரியரைக் கூறினாரெனக் கோடலு மாம். (கூ)

உரையற்ற தொன்றை யுரைசெய்யு மூமைகாள்
கரையற்ற தொன்றைக் கரைகாண லாகுமோ
திரையற்ற நீர்போற் சிந்தை தெளிவார்க்குப்
புரையற்று நின்றான் புரிசடை யோனே.

(இ - ள்.) உரையற்றதொன்றையுரைசெய்யுமூமைகாள் - நால் வகைவாக்குங் கடந்துநின்றதாகிய தொருபொருளை (உவமான மடை

யாள முதலியன வெடுத்துக்கூறி) உரைக்குமூமர்களே. கரையற்ற தொன்றைக்கரைகாணலாகுமோ - அளவிற்கடங்காத மணன்முதலிய வற்றிலே யொருபொருளை யிவ்வளவுண்டென்று நிச்சயித்தறிதல்கூடுமோ. (ஆதலால், இனி யெவ்வாறறிவார்க்கு வெளிப்படுவானெனில்) திரையற்றநீர்போற்சிந்தைதெளிவார்க்கு - (அலையாற்கலங்கலுற்றநீர்) அவ்வலைநீங்கியவழிக் கலங்கலின்றித் தெளிதல்போலப் பாசத்தான் மயங்காது சத்திநிபாதத்தாற் றெளிந்த வறிவினர்க்கு. புரையற்று நின்றான் புரிசடையோனே - கட்டமைந்தசடையுடையோனாகிய சிவ பெருமான் குற்றமாகிய களங்கமின்றி வெளிப்பட்டருளுவ னென்ற வாறு.

அவரே காணவல்லாரென்க. சொல்லத்தகாததைச் சொல்லி யறியத்தொடங்கினமைபா லூமைகாளென்றார். ஓ - எதிர்மறை. சிந்தையென்பது ஆகுபெயர். நிற்பானென்பதனைத் தெளிவினால் நின்றானென விறந்தகாலத்தாற் கூறினார். பின்னிரண்டடியின் கருத்தை "உறவுகோனட்டுணர்வுகயிற்றினன், முறுகவாங்கிக்கடையமுன்னிற்குமே." எனக்கூறிய திருநாவுக்கரசுநாயனார் திருப்பாட்டிலறிக; இன்னும், புரிசடையோனென்ற விதப்பால் அதனில் விளங்குந் திங்கள், கொன்றை முதலியனவுங் கொள்ளப்படும். அரியகாட்சியனாகியவ வனை யன்பினிற்காண்பார்க் கடையாளங் கூறியவாறுமாம். இக் கருத்தைத் திருஞானசம்பந்தமூர்த்திநாயனா ரருளிய திருப்பாசுரத்தில் "அரியகாட்சியராய்த்தமதங்கைசேர், வரியரேறுகந்தேறுவர் கண்டமுங், கரியர்." என்னுந் திருப்பாட்டிற் சேக்கிழார்நாயனார் "அரிய காட்சியரென்பதவ்வாறியைத், தெரியலாகிலையாற்றெரியாரென, வரிய வன்பினிற்காண்பவர்க்குண்மையாம், பெரியநல்லடையாளங்கள் பேசினார்." எனப் பொருள்விளக்கிக் கூறியதாற் காண்க. இது, அறியுமுறையிலறிவார்க்குச் சிவபிரான் வெளிப்படுவானெனக் கூறியவாறு.

வானுக்குளீசனைத்தேடுமருளர்கா
டேனுக்குளின்பஞ்சிவப்போகறப்போ
தேனுக்குளின்பஞ்சிறந்திருந்தாற்போ
லூனுக்குளீசனொளித்திருந்தானே.

(இ - ள்.) வானுக்குளீசனைத் தேடுமருளர்காள் - பரமாகாச சரீரியாய்த்தன்னுள்ளிருக்கு மிறைவனை நாடுகின்ற பேதைகளே. தே

னுக்குளின்பஞ் சிவப்போ கறுப்போ - மதுவினுள்ளே (கலந்தொன்றா யிருக்கின்ற) இன்பமாகிய சுவை சிவப்பாயிருக்குமோ? கறுப்பா யிருக்குமோ? கூறுவீராக. தேனுக்குளின்பஞ் சிறந்திருந்தாற் போல் - அம் மதுவினுள்ளே (புறத்தே தெரியப்படாமல்) அவ்வின்ப மாகிய சுவை நுகர்வார்க்குச் சிறந்திருந்தாற்போலவே. ஊனுக்கு ளீசனொளித்திருந்தானே - அப் பரமாகாச சரீரியாகிய விறைவனுங் கள் சரீரத்துள்ளே யந்தரியாமியாய்ப் புறத்துத்தோன்றாமல் ஆன்மா வுடன் கலந்திருக்கின்றானென்றவாறு.

ஆதலாலங்ஙனமிருக்கின்றவனை ஞானாசாரியனருளாற் கண்டறி வீரென்பதெச்சமாயிற்று. சிறந்திருந்தாற்போலவென்னு முவமை யடையால் ஊனுக்குளீசனொளித்திருப்பினு மதனால் விகாரமின்றிச் சிறந்துவிளங்கி நின்றானென்பதுகொள்ளநின்றது. ஊன் - சரீரம். தன்னுளிருப்பானைப் புறத்தேதேடலாலவரை மருளரென்றார். தே னின்சுவை நுகர்ந்தார்க்குமிவ்வாறு யிருந்ததென்று புறத்தேகாட் டிக் கூறவொண்ணாமையால் அதனைச் சிவப்போ? கறுப்போ? கூறு வீராகவென்றார்; இக்கருத்தாற் றன்னுள்ளிருப்பானைக் கண்டறிந்தா னந்தமுற்றோ ரதனைப்புறத்தோர்க்குக் கூறவொண்ணா தென்பதா யிற்று. இக் கருத்தைத் துறைசைப் பஞ்சாக்கரதேசிகரந்தாதியில் "நன்றில்லை தீயதுமில்லை சொல்லாவொன்று நண்ணியதே" எனக் கூறியிருத்தல் காண்க; அன்றியும் "மருவியிரு வரும்புணர வந்த வின்பம் வாயினாற் பேசரிது மணந்தவர்தா முணர்வர்" எனச் சிவ ஞானசித்தியார், அ-ஆஞ் சூத்திரம்-கூ-ஆந் திருப்பாட்டில் உதார ணங்காட்டியவாறுங் காண்க. (கக)

என்னையறிந்திலனித்தனைகாலமு
மென்னையறிந்தபினேதுமறிந்தில
னென்னையறியுமறிவையறிந்தபி
னென்னைவிட்டின்னையுசாவுகின்றேனே.

(இ-ள்.) என்னையறிந்திலனித்தனைகாலமும் - (தநுகரணபுவந போகமாகிய பாசமே பதிபாகத்தோன்றுமயக்கவறிவால்) இத்துணைக் காலமும் யானென்னியல்பையறியாமலுழன்றேன். என்னையறிந்தபி னேதுமறிந்திலன் - (சத்திநிபாதமெய்தி அப்பாசம் பொய்யாகத்தோ

ன்றுகையால்) என்னியல்பையறிந்தபின் மற்றொன்றையுமறிந்திலேன். என்னையறியுமறிவை யறிந்தபின், என்னைவிட் டுன்னையுசாவுகின்றேனே - (சத்திநிபாதமுற்று வினையொப்பாகிய காலத்துக் குருவாக வந்தருளி யநுக்கிரகஞ்செய்தபின்) என்னியல்பையறிதற்கேதுவாகிய ஞானசத்தியாகிய வருளையறிந்தபின் என்செயலெல்லா நின்செயலாகலின் என்னியல்பை மறந்து சிவானந்தத்தழுந்திநிற்றலாலுன்னியல்பையே நாடுகின்றேனென்றவாறு.

என்னையறிதலாவது, "நாமல்லவிந்திரிய நம்வழியினல்லவழி, நாமல்லநாமுமரனுடைமை" எனச்சிவஞானபோதம் ௧௦-ஆஞ்சூத்திரம் - இரண்டாமதிகரணத்திற்கூறியவாறறிதலாம். இதனுள் "தன்னையறியத்தனக்கொருதீங்கில்லை" யென்னும் நான்காந்திருப்பாட்டின் கருத்தை விளக்கிக் கூறினமைகாண்க. (கஉ)

* யான்பெற்றபேறுபெறுகவிவ்வையகம்
வான்பற்றிநின்றமறைப்பொருளொன்றுண்டு
வூன்பற்றிநின்றவுணர்வுறுமந்திரந்
தான்பற்றப்பற்றத்தலைப்படுமாறே.

(இ-ள்.) வான்பற்றிநின்ற மறைப்பொருளொன்றுண்டு, ஊன்பற்றிநின்றவுணர்வுறுமந்திரம் - பரமாகாசத்தைச் சரீரமாகப்பொருந்திநின்ற இரகசியப்பொருளொன்றுளது (அதுவே) இச்சரீரத்தைப் பொருந்திநின்ற வான்மாவாலறியப்படு மிரகசியப்பொருளாம். தான் பற்றப்பற்றத்தலைப்படுமாறே - (அதனை யாசிரியரநுக்கிரகஞ்செய்தருளிய முறைப்படியே அத்துவிதபாவனையாகச்) சிந்திக்கச்சிந்திக்கத் (தர்ப்பணத்தை விளக்கவிளக்கவந்திடுமவ்வொளிபோல வெளிப்படலால்) தானேகிட்டும் விதமாகும். யான்பெற்றபேறுபெறுகவிவ்வையகம்-இதுவே, யான்றேடிப்பெற்றுக்கொண்ட வான்மலாபம்; இதனையிந்தவுலகத்தார் பெறக்கடவராகவென்றவாறு.

மறை - மந்திரம் ; இரண்டிற்கும் இரகசியமென்பது பொருள். சிவஞானசித்தியார் ௯-ஆஞ்சூத்திரம்-௧உ-ஆந் திருப்பாட்டிற்கூறிய

---

* நான்பெற்ற வின்பம் பெறுகவிவ்வையகம் என்பது அச்சுப்பிரதிப் பாடம்.

வாறு "இந்தனத்தினெரிபாலினெய்பழத்தினிரதமெள்ளின்கணெண் ணெய்யும்போல" அறியப்படாமன் மறைந்துநிற்றலான் மறைப்பொரு ளென்றார் ; மந்திரமென்பதற்கிவ்வாறன்றிப் பஞ்சாக்கரமெனப்பொ ருள்கொண்டு, ஐந்தவத்தையினு நிற்குமுறையாகிய வோதுமுறை யாற் பற்றப்பற்றவெனப் பொருள்கூறலுமொன்று. கடையடியின் கருத்தை "சிந்திக்கச் சிந்திக்கத் தர்ப்பணத்தை விளக்க, வந்திடுமவ் வொளிபோலமருவிபரனுளத்தேதவரவரவந்திடுவன்" எனக்கூறிய சிவ ஞானசித்தியார் கூ-ஆஞ் சூத்திரம் கo-ஆந் திருப்பாட்டிலறிக. இவ் வையகந்தனக் கினசம்பந்தமாகையாற் காகமுறவுடன் கலந்துண் ணக்கரைவதுபோல யான்பெற்றபேறு பெறுகவிவ்வையகமென்றார். தான், ஏ-இரண்டும் அசை. (கரு)

உள்ளம் பெருங்கோயி லூனுடம்பு சுற்றாலை
வள்ளற்பிரானார்க்கு வாய்கோபுரவாச
றெள்ளித் தெளிவார்க்குச் சீவன் சிவலிங்கங்
கள்ளப் புலனைந்துங் காளாமணி விளக்கே.

(இ-ள்.) வள்ளற்பிரானார்க்கு உள்ளம்பெருங்கோயில் - (ஆன்ம கோடிகட்கு வேண்டுவனவேண்டுமாறே வரையாதநுக்கிரகஞ்செய் யும்) வள்ளலாகிய முதல்வர்க்கு மனம் பெரிய கோயிலாம். ஊனுடம்பு சுற்றாலை - (ஐம்பூத விகாரமாகிய தூல சரீரம் பந்தித்து வளைந்திருப் பதனால்) அது சுற்றாலையமாம். வாய்கோபுரவாசல் - நால்வகை வாக் குகளுங் கோபுரவாயில்களாம். தெள்ளித்தெளிவார்க்குச் சீவன் சிவ லிங்கம் - இவ்வியல்பினை மிகவாராய்ந்து தெளியுமெய்ஞ்ஞானியர்கட் குச் சீவான்மாவே சிவந்தங்குகின்ற இலிங்கமாம். கள்ளப்புலனைந்துங் காளாமணிவிளக்கே - தெளிந்தபின், பசுகரணங்களெல்லாம் பதிகா ணங்களாதலாற் கள்ளஞ்செய்யுங் கருவியாகிய புலன்களைந்துங் கரிய மணிவிளக்காமென்றவாறு.

உள்ளம்பெருங்கோயிலென்றதனைப் பெரியபுராணம் வாயிலார்நாய னார் புராணத்தில், "மறவாமையானமைத்தமனக்கோயிலுள்ளிருத்தி" யெனக் கூறுமாறு காண்க. தூல சரீரத்தைக்கூறினமையா லேனைய சரீரங்களையு மேனையவாவரணங்களாகக் கொள்ளப்படும். ஆலையமென் றது ஆலையெனக்குறைந்துநின்றது. வாயென்றது ஆகுபெயராய்

நால்வகை வாக்கை யுணர்த்தியது. ஞானசாத்திரவாயிலாலறிதலின், அதற்குக்காரணமாகிய வாக்கினை விதந்துரைத்தார். ஆன்மாவினிடத்திலே நீக்கமின்றி நிறைந்து நிற்றலாற் சிவனைச் சிவலிங்கமென்றார். ஆன்மவறிவைக் கவர்தலாற் கள்ளப்புலனென்றார். புலனைந்துமெனக்கூறினும் இனம்பற்றி யேனையகருவிகளுங் கொள்ளப்படும். பசுகரணங்களெல்லாம் பதிகரணங்களாகுங்காலத்துப் பகல்விளக்குப் போலத் தத்தஞ் சத்திமடங்கிநிற்றலாற் காளாமணிவிளக்கென்றார்; இக்கருத்தைத் திருவானைக்காப்புராணம் ஞானவுபதேசப் படலத்தில் "கருவிமுன்பகல்விளக்கொடுகடுக்கு" மெனக்கூறல்காண்க. சிவன் சிவலிங்கமென்பதனுல், அதனிடத்தர்ச்சிக்குமுறைமையைச் சிவஞான சித்தியார் கூ-ஆஞ்சூத்திரம் கச-ஆந்திருப்பாட்டிற்காண்க. களமணி காளாமணியென விகாரமாயிற்று. (கச)

* ஒடுங்கிநிலைபெற்றவுத்தமருள்ள
நடுங்குவதில்லை நமனுமங்கில்லை
யிடும்புகளில்லை யிராப்பகலில்லை
கடும்பசியில்லை கற்றுணர்ந்தோர்க்கே.

(இ-ள்.) ஒடுங்கிநிலைபெற்றவுத்தமர்கற்றுணர்ந்தோர்க்கு - உலகமொடுங்குதற் கேதுவாயிருக்கின்ற பதியினிடத்து (அத்துவிதநிலையையறிந்தவ்வாறு) நிலைபெற்றிருக்கிற சிரேட்டராகிய கற்றுணர்ந்தோர்க்கு. உள்ளநடுங்குவதில்லை - (செனனமரணங்களில்லையாதலாலதுநோக்கி) மனநடுக்கமுறுவதில்லை. நமனுமங்கில்லை- அவையில்லையாகவே சரீரத்திரயங்களுடனிருவினைப்பற்று விட்டமையால் இயமனுமவ்விடத்து வருவதில்லை ; எனவே இயமனுந்தன்றொழில் செய்யுமாறில்லையென்பது கருத்தாயிற்று. இடும்புகளில்லை - ("ஏன்ற வூழுடவிருத்தலினேறும் வல்வினையுந், தோன்றும்" †என்றபடி ஒரோவழிப் பயிற்சிவயத்தாற்றோன்றுமாயின், திருவெழுத்தினைச் சூழ்ந்திடினழியுமாதலால்) துன்பங்களில்லை. இராப்பகலில்லை - (இரவுபகலற்றவிடத்திருப்பவராதலாற் றோன்றியழியுமாலையவாகிய) இரவும் பகலுமில்லை. கடும்பசியில்லை - (சிவானந்தப்பெரும்போக நுகர்ந்திருக்கின்றபடியா

---

* ஒடுங்கு நிலைபெற்றவென்பது அச்சுப் பிரதிப்பாடம்.

† திருவானைக்காப்புராணம் ஞானவுபதேசப்படலம்.

லவ்விரவும் பகலுநுகரும் வெற்றுணவருந்துதற்கேதுவாகிய) கடிய பசியுமில்லை யென்றவாறு.

கற்றுணர்ந்தாராவாரிவரென வகைதோன்றக் கூறுவார் ஒடுங்கி நிலைபெற்றவுத்தமரென்றார். திருவள்ளுவநாயனாரும் "கற்றதனாலாய பயனென்கொல்வாலறிவ, னற்றாடொழாரெனின்" என்றார். ஒடுங்கி யென்ற நீண்டெச்சமன்று பெயரென்க; சிவஞானபோத முதற்சூத்திரத்திற்காண்க; இவ்வாறன்றி யெச்சமாக்கிக் கருவிகளொடுங்கியெனப்பொருள்கூறலுமாம். இவ் வருமைப்பாட்டின் கருத்தைச் சிவஞானசித்தியார் ரு-ஆஞ் சூத்திரம் ௬௨-ஆந் திருப்பாட்டில் "ஞாலமதின்ஞான நிட்டையுடையோருக்கு நன்மையொடு தீமையில்லை நாடுவதொன்றில்லை." எனக்கூறினமை காண்க. (கரு)

எட்டுமிரண்டுமறியாதவென்னை
யெட்டுமிரண்டுமறிவித்தானென்னந்தி
யெட்டுமிரண்டுமறிவாலறிந்தபின்
னெட்டுமிரண்டுமிலிங்கமதாமே.

(இ-ள்.) எட்டுமிரண்டுமறியாதவென்னை - புரியட்டகசரீரமும் ஆன்மாவும், பதியுமாகிய பத்துமிதுகாறு மறியாதிருந்தவெனக்கு. எட்டுமிரண்டுமறிவித்தானென்னந்தி - என்னுடைய வாசிரியனாகிய திருநந்திபெருமான் என் பக்குவமறிந்து அப்பத்தையு மறியுமாறுபதேசித்தருளினன். எட்டுமிரண்டுமறிவாலறிந்தபின், எட்டுமிரண்டுமிலிங்கமதாமே - (இங்ஙனமே அப்பத்தையுமொருவரறியாவிடிற் பதியாமாறில்லையாதலாற்) பத்தையுங் குரு வருளாலநுக்கிரகித்தருள வறிவாலறிந்தபின்பே பத்தும்பதியாய் விடுமென்றவாறு.

பத்துமிலிங்கமாமா றெவ்வாறெனில்? பசுகரணங்களெல்லாம் பதிகரணங்களா யான்மாப் பதியிற்கலந்து தாடலைபோ லடங்கிநிற்றலாற் பதியாமென்க. புரியட்டகசரீர முன்னுரைத்தாம். எட்டுமிரண்டு மென்றதற் கிவ்வாறன்றி அகரம், உகரமெனப் பொருள்கொண்டு, அவ்விரண்டும் பிரணவமாதலா லதுவெனப்பொருள்கூற லுமொன்று; இனம்பற்றி மகரவொற்று முடன்கூட்டிப் பிரணவமெனக் கொள்க. பிறரும்,'அ உ வறியாவறிவிலிடைமகனே, நேவலையனின்னுட்டை நீ'

எனக்கூறுமாறு காண்க. பிரணவத்தைச் சிவஞானபோதம் சு-ஆஞ் சூத்திரம். "அகரவுகரமென்னுந் திருவெண்பாவிலறிக." (கசு)

உள்ளத்தொருவனையுள்ளூறுசோதியை
*யுள்ளம்விட்டோடிநீங்காவொருவனை
யுள்ளமுமவனுமுறவாயிருந்து
முள்ளமவனையுருவறியாதே.

(இ-ள்.) உள்ளத்தொருவனை - (அகரவுயிர்போலறிவாகிஎங்கு நின்றவனாதலால்) ஆன்மாவினகத்தேயுள்ளவேகனை. உள்ளூறு சோதியை - (அறிவினுளறிவாய் விளங்குதலால்) அகத்தே விளங்குமொளியை. உள்ளம்விட்டோடி நீங்காவொருவனை - (பிரிப்பின்றிச் சமவேதமாய் நிற்றலால்) ஆன்மாவை விட்டுப்போய் நீங்காதிருக்கின்றவொப்பற்றவனை. உள்ளமுமவனுமுறவாயிருந்து முள்ளமவனையுருவறியாதே - காட்டுமுபகாரஞ்செய்திருக்கின்றவவனு மதனைப் பெறுகின்றவான்மாவு மொன்றாய்க்கலந்திருந்து மவ்வான்மா அவனுடையவழகியவுருவத்தை யறியமாட்டாது; இதுவென்னவியப்பென்றவாறு.

காட்டுமுபகாரத்திற்குதாரணம் சிவஞானபோதத்தில் "காணுங் கண்ணிற்குக்காட்டுமுளம்போல்" என்றருளிய சூத்திரத்திலறிக. அறியமாட்டாமைக்குக் காரணம் பாசத்தழுந்தித்தெரியாநிலையுற்று நிற்றலாலென்க. உள்ளம் ஆன்மா என்பதைச் சிவஞானபோதத்தி லிவ்வெண்பாவிலறிக. (கஎ)

வாசித்துப்பூசித்துவரமலர்கொய்திட்டுப்
பாசக்கிணற்றில்விழுகின்றபாவிகாள்
மாசற்றசோதிமணிமலர்த்தாளை
நேசத்தேவைக்கநினைவறியீரே.

(இ-ள்.) பாசக்கிணற்றில் விழுகின்ற பாவிகாள் - பந்தமாகிய கூபத்தில் வீழ்ந்திருக்கின்ற பாவகாரிகளே. மாசற்றசோதிமணிமலர்த் தாளை, வரமலர்கொய்திட்டுப்பூசித்துவாசித்து - இயல்பாகவே களங்

* உள்ளம் விட்டோரடியு நீங்காவென்பது அச்சுப்பிரதிப்பாடம்.

கமற்றிருக்கின்றவொளியாகிய பதியினழகியமலரடியை விசேடமான மலர்களைப்பறித்து,(குருமூர்த்தியருளிய விதிப்படி) புறம்பேயர்ச்சித் துத்தோத்திரங்களைப்படித்து. நேசத்தேவைக்கனைவறியீரே-அகத் தேயறிந்து அன்புசிவமிரண்டில்லையெனக்கூறலால், அன்பகத்தேயத் துவிதமாகப்பாவித்துக்கொள்ள ஞாபகமுற்றறிகின்றீரில்லை. இனி எவ்வாறு முத்திக்கரைசேர்வீரென்றவாறு.

இத் திருப்பாட்டின் கருத்தைச் சிவஞானசித்தியார் கூ-ஆஞ் சூத்திரம் "புறம்பேபுமான்கழல்பூசிக்கவேண்டிற்பூமரத்தினிலையுதிர்ந் தபோதுகளுங்கொண்டு, சிறந்தாருஞ்சீர்ச்சிவனை ஞானத்தாலங்குச் சிந்திக்கும்படியிங்குச்சிந்தித்துப்போற்றி" என்ற திருப்பாட்டிற் காண்க. பாசமுள்ளமட்டும் பாவ நீங்காமையாலே பாவிகாளென விளித்தாரென்க. அறியீரென்றதனால் அறிந்தாற் பாசக்கிணற்றி னின்று நீங்கலாமென்பதாயிற்று; இக் கருத்தமையத் திருவள்ளுவ நாயனாரும் "பிறவிப்பெருங்கடனீந்துவர்நீந்தா, ரிறைவனடிசேரா தார்" எனக்கூறுமாறு காண்க. இத் திருப்பாட்டுக் கொண்டுகூட்டுப் பொருள்கோளாதலறிக. (கஅ)

மனத்தினெழுந்ததோர்மாயக்கண்ணாடி
நினைக்கினதனைநிழலையுங்காணார்
வினைப்பயன்போகவிளக்கியுங்கொள்ளார்
புனக்கடையிச்சித்துப்போகின்றவாறே.

(இ - ள்.) மனத்தினெழுந்ததோர்மாயக்கண்ணாடி - மனச்சங் கற்பத்தினாலுண்டாகிய (வினைப்பயனால்வந்த) பொய்ச் சரீரமாகிய தோர் கண்ணாடி. நினைக்கினதனைநிழலையுங்காணார் - ஆராயின், அக் கண்ணாடியிலறியத்தக்க ஆன்மாவாகிய பிரதிவிம்பத்தையுமறியமாட் டார். வினைப்பயன்போகவிளக்கியுங்கொள்ளார் - இருவினைப்பயன் றொடராதறும்படி (குருவருளால்) அக் கண்ணாடியை விளங்கச்செய் வித்து (பிரதிவிம்பத்தையும் விம்பத்தையும்) அறிந்துகொள்ளார். புனக்கடையிச்சித்துப் போகின்றவாறே-(இவ்வாறறியமாட்டார் பிறப் பது மிறப்பதுமாகிய செயலெவ்வாறுமெனில்) ("ஆக்கைக்கேயிரை தேடியலமலந்து") கடையாகிய சுடுகாட்டை விரும்பிச்செல்லுமாறு மென்றவாறு.

. மாயம் - பொய். மனத்தால் வினைவிளையு மென்பதனை ஞானாமிர்தம் கஎ-ஆவது திருவகவலிற் காண்க. மனத்தைக்கூறினும் ஏனை வாக்குக் காயங்களையுமினம்பற்றிக் கொள்ளத்தகும். கருவிகளெல்லா மறிகருவியாயிருத்தலிற் சரீரத்தைக் கண்ணாடியென்றார்; இக்கருத்தை "மாயாதனுவிளக்காமற்றுள்ளங்காணாதே- லாயாதாமொன்றையதுவதுவாய்" எனக்கூறியருளிய சிவஞானபோதம் ச ஆஞ் சூத்திரவுரையிற் காண்க. நிழலையுமென்னுமிழிவு சிறப்பும்மையால் விம்பமாகிய பதியையுமறியாரென்பதாயிற்று. பதியைவிடாதுகலந்து நிழல்போலப் பிரியாதிருத்தலின் ஆன்மாவை நிழலென்றார்; அன்றிப் பதியியக்கவியங்குந்தன்மை யுண்மையால் நிழலென்றாரெனினுமாம்.()

அத்திப்பழமுமரைக்கீரைநல்வித்துங்
கொத்திக்குதறிக்கூட்டிலடைத்தது
வத்திப்பழத்தினமுதமறிந்தபின்
கத்திக்கொண்டைவருங்காடுறைந்தாரே.

(இ - ள்.) கொத்திக்குதறி அத்திப்பழமுமரைக்கீரைநல்வித்துங் கூட்டிலடைத்தது - பெண்ணுமாணுஞ் சையோகலீலைசெய்து கருப்பாசயப்பையைக் கிளரப்பண்ணிச் சுரோணிதமு நல்ல சுக்கிலமும் வெளிப்படச்செய் தவையிரண்டுமொன்றாக அக்கருப்பாசயப்பையாகிய கூட்டிற் பூமியிற் செனனமாதற்கு முன்னடைக்கப்பட்டது. பின்னிரண்டடிக்கு - செனனமான சரீரத்தினுள்ளே மோக்ஷமாகிய வத்துவித நிலையையுணர்ந்தபின்பு (தத்தமக்குச் செயலின்மையினாலே) பஞ்சேந்திரியங்களுங் கதறிக்கொண்டு வெளியே நீங்கிப்போயினவென்றவாறு.

அத்திப்பழமுஞ் சுரோணிதமுஞ் செந்நிறமுண்மைநோக்கிச் சுரோணிதத்தை அத்திப்பழமாகவும், அரைக்கீரைவித்துஞ் சுக்கிலமு மீண்டுமீண்டு தோன்றியழியுந் தன்மைநோக்கிச் சுக்கிலத்தை அரைக்கீரைவித்தாகவு முருவகஞ்செய்துரைத்தார். சுரோணிதத்தினுஞ் சுக்கிலஞ் சிறந்தமையால் நல்வித்தென்றார். பின்னர் அத்திப்பழமென்றது சரீரத்தையென்க. "அமுதமேசுதைநீர் மோக்கம்" என்பவாகலால், அமுதமென்பதற்கீண்டு மோக்ஷமென்க. இவ்வாறன்றி அமுதநிலையறிந்தபின் எனப்பொருள்கொண்டு யோகப்பயிற்சி முத

றியபின் எனப் பொருள்கூறலுமாம். ஐவரென்னுந்தொகைக்குறிப்பு ஈண்டுப் பஞ்சேந்திரியங்களை யுணர்த்தியது. (உ0)

வழுதலைவித்திடப்பாகன்முளைத்தது
புழுதியைக்கிண்டிப்பூசனிபூத்தது
முழுதும்பழுத்ததுவாழையிளங்கனி
தொழுதுகொண்டறிந்தோர்தொட்டுடையாரே.

(இ - ள்.) வழுதலைவித்திடப்பாகன்முளைத்தது - வழுதலைவித்தாகிய சுக்கிலத்தைக் கருப்பாசயப்பையாகிய நிலத்திலிட (இருவினையாகிய சுசப்புப்பற்றியதனால் பின்பு சுரோணிதத்துடன்கூடி வழுதலையாக முளையாது) பாகலாகிய தேகமுண்டாயிற்று. புழுதியைக் கிண்டிப் பூசனிபூத்தது - புழுதியாகிய புறக்கருவி யகக்கருவிகளைப் பிரித்தாராய்தலினால் அதன்மேற் பூசனிப்பூவாகிய இதயகமலந்தோன்றிவிளங்கியது. முழுதும்பழுத்தது வாழையிளங்கனி - அப்பூசனிப்பூவாகிய இதயகமலத்தில் வாழையிளங்கனியாகிய சிவம் பூரணமாகக் கனிந்திருந்தது. தொழுதுகொண்டறிந்தோர் தொட்டுடையாரே - அக்கனியை ஆசாரியானுக்கிரகம்பெற்று அறியுமுறையாலறிந்து நுகர்ந்தோரே சிவபூரணநிலையுடன் பொருந்துதலுடையா ரென்றவாறு.

வழுதலைக்கு வித்துக்காரணமாயிருத்தல்போலக் காயத்துக்குக் காரணஞ் சுக்கிலமாயிருத்தலால் அதனை வழுதலைவித்தாகவுருவகஞ் செய்தார். பூசனிக்காயின்மேற் பூப்பூத்ததுபோலக் கருவிகளின்மேலிதயகமலந்தோன்றுதலால் அதனைப் பூசனிப்பூவென வுருவகஞ்செய்தார்; அவ் விதயகமலத்தைச் சிவஞானபோதம் கூ-ஆஞ் சூத்திரத்தில் ஞானபூசைத்தானமாகவும், "மண்முதனாளம்" என்னுந் திருவெண்பாவிலிதயகமலவடிவமாகவுங் கூறியிருத்தல் காண்க; அக்கமலமுகை வாழைப்பூப்போலக் கீழ்நோக்கியிருத்தலா லதனைப் பிராணயாமத்தினாலே மேனோக்கியலரப்பண்ணி யதிற் சிவத்தைக்காண்பதனாற் சிவத்தைக்கனியாக வுருவகஞ்செய்தாரென்க. வித்தொன்றிட மற்றொன்று முளைத்தது என்னும் பழமொழியை விளக்கிக்கூறியவாறுணர்க. வழுதலை - கத்தரிச்செடியிலோர் பேதமுள்ளது. (உக)

வாழைபழுத்துக்கிடக்குதுவையகம்
வாழையைச்சூழத்தாழ்க்கோத்துநிற்குது
தாழைத்திறந்துகனியுண்ணமாட்டாதார்
தாழம்பழத்திற்குத்தள்ளுண்டவாறே.

(இ - ள்.) வையகம்வாழைபழுத்துக்கிடக்குது - உலகில் சிதா காசமாகிய குகைவீட்டிலே வாழைப்பழமாகிய சிவம் பூரணமாகக் கனிந்திருப்பது. வாழையைச்சூழத் தாழ்க்கோத்துநிற்குது - அவ் வாழைப்பழமாகிய சிவத்தையறிந்து துய்க்கவொட்டாமற் சுற்றெல் லாந் தாழாகிய மும்மலக்கொத்துப் பிணிப்புற்றுநிற்பது. தாழைத் திறந்து கனியுண்ணமாட்டாதார் - அத்தாழாகிய மும்மலக்கொத்தை (ஆசாரியரநுக்கிரகத்தினலே) ஞானமாகிய திறவுகோலாற்றிறந்து அவ் வாழைக்கனியாகிய சிவத்தையறிந்து பேரின்பரசத்தைத் துய்க்க மாட்டாதவர். தாழம்பழத்திற்குத்தள்ளுண்டவாறே - (சிற்றின்பந் துய்ப்பதெவ்வாறெனில்) வாழைக்கனியிருக்கவும் பயனில்லாத தா ழம்பழத்திற்கு முயற்சித்துத் தள்ளாடியவாறுமென்றவாறு.

மேற்கவியைப்போலவே யிக்கவியினுஞ் சிவத்தைவாழைக்கனி யாக வுருவகஞ்செய்தாரென்க. கிடக்குது, நிற்குது என்பன தொ ழிற்பெயர். இது சிற்றின்பநுகர்வோரை நோக்கிக்கூறியவாறுமென்க.

கள்ளவழியில்விழுந்தவிளாங்கனி
கொள்ளச்சென்றைவருங்குழியில்விழுந்தனர்
தெள்ளியஞானிதெளிவுறக்கண்டபின்
*பிள்ளைகளைவரும்பிதற்றொழிந்தாரே.

(இ - ள்.) கள்ளவழியில் விழுந்த விளாங்கனி - (சன்மார்க்கமா கிய நன்னெறியல்லாத) கள்ளவழியாகிய மாயை வழியில் விழுந்து கிடக்கின்ற விளாங்கனியாகிய தன்மாத்திரைகளை. கொள்ளச்சென் றைவருங்குழியில் விழுந்தனர் - இந்திரியங்களைவருந்துய்த்தற்குக் கவரச்செல்லலாற் கருக்குழியினிடத்து விழுந்துகிடக்கின்றனர். பின் னிரண்டடிக்கு - தவத்தானுந் தியானத்தானு மெல்லாப் பொருளையு மறிந்து தெளிந்த ஞானி ஞானத்தாலத்துவிதநிலையைக் களங்கமற

---

* பித்தொழிந்தாரே யென்றும் பாடம்.

வறிந்தபின்னர்ப் பிள்ளைகளாகிய அவ்வைவரும் பொய்யை மெய் மெய் யென்று பிதற்றுதலை நீங்கினரென்றவாறு.

பதியையடையு மார்க்கமன்மையான் மாயைவழியினைக் கள்ள வழியென் றுருவகஞ்செய்தார். மாயையின்வழியாகத்தன்மாத்திரை களைந்து மின்பமாகத் தோற்றுதலாற் கள்ளவழியில் விழுந்த விளாங் கனி யெனத் தன்மாத்திரைகளை விளாங்கனியாக வுருவகஞ்செய்தார். ஆன்மாவாகிய பிதாவிற்குப் பஞ்சேந்திரியங்கள் கவர்ந்துதர விடய மாகிய பொருளைப் பெறுதலாற் பஞ்சேந்திரியங்களைப் பிள்ளைகளென் றுருவகஞ் செய்தார். பாசஞானத்தாற் பதியையடைய முடியாது சிவஞானத்தாலே பதியை யடையலா மென்பதனைச் சிவஞானச்சித்தி யாரில், "பாசத்தாஞானத்தாலும்" என்னுந்திருப்பாட்டிலறிக. (உரு)

எழுதாதபுத்தகத்தேட்டின்பயனைத்
தெருளாதகன்னிதெளிந்திருந்தோத
மலராதபூவின்மறுவின்மணத்தைப்
பிறவாதவண்டுமெணமுண்டவாறே.

(இ - ள்.) எழுதாத புத்தகத் தேட்டின் பயனை - (எழுதப்பட் டிருக்கு மேட்டின் பயனாகிய கலைஞானத்தைப் போல) எழுதப்படாத புத்தகத்தேடாகிய சிவஞானத்தின் பயனாகிய பதியை. தெருளாத கன்னி தெளிந்திருந்தோத - சிவஞானியரல்லாதார் தெளிய முடியாத கன்னியாகிய சத்தியருளாற் றெளிய அநுக்கிரகமுற்றறிவிக்க. பின் னிரண்டடிக்கு - மலராத பூவாகிய விதயகமலத்திற் றோன்றும் பதி யாகிய குற்றமில்லா மணத்தை யினிப் பிறவியில்வாராத சிவஞானிய ராகிய வண்டுகள் அம்மணத்தை யறிந்துபெற்றுத் துய்த்தவாறிவ் வாறுமென்றவாறு.

குருவருளாலநுக்கிரகஞ்செய்யப்பெறுதலிற் சிவஞானத்தை யெழுதாத புத்தகத்தேடென்றார். சிவஞானசித்தியாரிற் "சிவஞ்சத்தி தன்னை" யெனக்கூறிய திருப்பாட்டிற் சிவசத்திக்குக் கன்னியெனப் பெயர்கூறல் காண்க. அச்சிவசத்தியநுக்கிரகத்தாற் சிவத்தையடைத லுண்மை யென்பதனைத் "தாயுடனேசென்றுதாதையைக்கூடிப்பின் றாயைமறந், தேயுமதேநிட்டையென்றானெழிற்கச்சியேகம்பனே" எனப்பட்டினத்தடிகள்கூறிய வருமைத்திருப்பாட்டிற்காண்க. இதய

கமலம் மலராத பூ வென்பதும் அதனை மலர்வித்துக் கொள்ளவேண்டியதென்பது முன்னரே கூறப்பட்டுள்ளன. ஏனையபூவின்மணம்போலழியாதுநிலைபெறலால் மறுவின்மணமென்றார். மலரின்மணத்தை நாடுவது வண்டிற்கியல்பாதல்போலச் சிவத்தைநாடவேண்டுவது ஆன்மாவிற்கியல்பாகுமென்க. ஏனையவண்டுகள்போலன்றிப் பிறவாத் தன்மையடைவராதலாற் சிவஞானியரைப் பிறவாதவண்டென வுருவகஞ் செய்தார். அறிவிக்குந்தன்மைநோக்கி முன்னரேட்டின்பயனாகவும், அநுபவிக்குந்தன்மைநோக்கிப் பின்னர் மணமாகவுங் கூறினார். இத்திருப்பாட்டிற் சிவயோக சிவப்பேறுணர்ந்துகொள்க. தெளிந்து எச்சத்திரிபு. (உச)

இருட்டறைமூலையிருந்தகுமரி
குருட்டுக்கிழவனைக்கூடல்குறித்துக்
குருட்டினைநீக்கிக்குணம்பலகாட்டி
மருட்டியவனைமணம்புணர்ந்தாளே.

(இ - ள்.) இருட்டறைமூலையிருந்தகுமரி - மாயையினப் பாலுள்ளதாகிய பூரணசிவத்துடன் பூமணம்போலிருந்தசத்தி. குருட்டுக்கிழவனைக் கூடல் குறித்து - ஆணவத்தான் மறைப்புண்டு சிவத்தைக் காணாதிருக்கின்ற பழையோனாகியவான்மாவை (முத்தியருளுமாறு) சார்தல்கருதி. பின்னிரண்டடிக்கு - ஆணவமலத்தை நீக்கிக்காட்டுமுபகாரமுதலிய தன்குணங்களையறிவித்து மலத்திரையங்களைப் பற்றறுதுவிடுத்துத் தன்வசத்திலழுந்திநிற்குமாறு மயக்கி யக்கிழவனைச் சார்ந்தாளென்றவாறு.

இருட்டறை யென்றது மாயையை. மூலை யென்றது அதற்கப்பாலுள்ளதாகிய சிவத்தை. மேலைத்திருப்பாட்டிற் கன்னியென்றது போல இத்திருப்பாட்டிற் குமரி யென்றாரென்க. இது சத்தி நிபாதமுணரக்கூறியவாறு. சத்தி - அருள். நி - உபசர்க்கம். பாதம் - பதிதல்; விழுதலுமாம். சத்தி பதிய ஞானம்விளைந்து பற்றொன்றின்றிச் சிவமுந் தாமு ஞாயிற்றொளியுங் கண்ணொளியும் போலத் துவிதமாவரென்க; இக்கருத்தைச் சிவஞான சித்தியாரில் "மிக்கதொருபக்குவத்தின்" என்னுந்திருப்பாட்டிலறிக. (உரு)

ஆமாறறிந்தேனகத்தினரும்பொருள்
போமாறறிந்தேன்புகுமாறுமீதென்றே
யேமாப்பதில்லையினியோரிடரில்லை
நாமாமுதல்வனுநாமெனலாமே.

(இ - ள்.) போமாறறிந்தேன் புகுமாறுமீதென்றே, ஆமாறறிந் தேனகத்தினரும்பொருள் - (பாசங்கள்விட்டு) போகுமார்க்கத்தை யறிந்தேன். (அங்ஙனமறிந்து) புகுந்திருக்கு நெறியிதுவென்று கருதி யுள்ளிருக்கு மரும்பொருளாகியசிவமே நானாகுமாற்றைத் தெரிந்து கொண்டேன். ஏமாப்பதில்லை யினியோரிடரில்லை - (ஆதலால்) இனி யொன்றை யவாவுறுதலில்லை அவாவுறுதலால் வருமொருவிதமான துன்பமுமில்லை. நாமாமுதல்வனுநாமெனலாமே - (ஆதலாலிங்ஙன முணர்ந்தோரே) நாம் அவனேயெனச் சோகம்பாவனை செய்யத் தகும், அம்முதலவனு நாமேயாவோமென்று பக்குவர்க்குச்சொல்ல லுங் கூடுமென்றவாறு.

ஏனையோர்க்கு அங்ஙனமுரைத்தல் கூடாதென்ப தெச்சமா யிற்று. போகுமாறு குருவருளாற்சரியைமுதலிய மார்க்கத்தையநுட் டித்தலாலாம். புகுமாறு நிட்டையினுறைத்துநிற்றல். ஈற்றடியிற் கூறியகருத்தைச் சிவஞானபோதம் உ-ஆஞ் சூத்திரத்தில் "தமியே னுளம்புகுதல்-யானேயுலகென்பனின்று" எனக்கூறிய திருவெண்பா விலறிக. உபமந்நியுமுனிவர்பாற் சிவதீக்ஷைபெற்றுச் சிவோகம் பா வனையுற்றிருந்த கண்ணனார் கீதையிலே நானே முதல்வனெனக்கூறி யிருத்தலுங் காண்க. ஏ இரண்டுமசை; தேற்றமுமாம். (உ௬)

மனத்திலிருந்தமதிவாளுருவி
யினத்தினைநீக்கியிரண்டறவீசி
நினைத்தவிடத்தேநிலைபெறுமாகி
லனைத்துயிர்க்கெல்லாமதிபதியாமே.

(இ - ள்.) மனத்திலிருந்தமதிவாளுருவி - மனத்தினுடனிருந்த வறிவென்னும்வாளைப் பிரகாசிப்பிக்கச்செய்து. இனத்தினைநீக்கி - இனமாகிய முப்பத்தாறு தத்துவக்கூட்டங்களையு முறையாகக்கண்டு கழித்து. இரண்டறவீசி - ஆணவகன்மங்களைக்கெடுத்து. நினைத்த விடத்தே நிலைபெறுமாகில் - கருதியவிடமாகிய பூரணப்பொருளிடத்தே

அத்துவிதநிலை பெற்றிருப்பனுயின். அனைத்துயிர்க்கெல்லா மதிபதி யாமே - எல்லாவுயிர்க்கு மதிபதியாகிய வப் பூரணப்பொருளாகுவ னென்றவாறு.

மனத்தில் என்ற இல்லுருபை ஒடுருபாக்குக. ஈண் டினத்தினை நீக்கியெனக் கூறல்போலவே, சிவஞானபோதம் கூ-ஆஞ்சூத்திர மூன்றுமதிகரணத்தில் "கண்டவிவையல்லேனுனென்றகன்று" எனக் கூறல்காண்க. ஆம் என்பது செய்யுமென்னு முற்றுச்சொல். எனவே அறிவாற் றத்துவங்களையறிந்து நியதிகழித்து ஆணவ கன்மங்களைத் தொலைக்காதவன் பூரணசிவமாகானென்க. (உஎ)

உலையொக்கக்கொல்லனூதுந்துருத்திபோற்
கலையொக்கப்பாயுங்கருத்தறிவாரில்லை
கலையொக்கப்பாயுங்கருத்தறிவாளர்க்கு
நிலையொக்கச்சிவனிறுத்தலுமாமே.

(இ - ள்.) முதலிரண்டடிக்கு - கொல்லனுலையிலே சமமாகவூதப் படுகின்ற துருத்திகளின் (மாறிமாறியியங்குகின்ற) வாயுக்களைப் போல இடைகலை பிங்கலைகளின் மாறிமாறி யொக்கவியங்குகின்ற சுவா சங்களின் றுற்பரியத்தை யுணர்வாரில்லை. எனவே * "பேசிருபத் தோராயிரத்தறுநூறுயிர்ப்பினைப்பிரித்தசடையினுன், மாசறுமானை முகப்பிரான்முதலோர்மகிழ்வுறும்படியவர்க்குதவி" ஆயினும், சுழு முனையிற் செலுத்தியானு நிற்கும் யோகநிலையை யுணரவேண்டுமென் பதாம். பின்னிரண்டடிக்கு - அங்ஙனங் கூறியபடியே குருவருள் பெற்று யோகநிலையை யுணரவல்லார்க்குச் சிவனை நிலைப்பொருளாகிய சிவத்துட னத்துவிதநிலையிலே நிற்கச்செய்தல் கூடுமென்றவாறு.

இச் சிவோக நிலையைச் சிவஞானசித்தியார் அ-ஆஞ்சூத்திரம் "சகமார்க்கம்புலனெடுக்கித்தடுத்துவளியிரண்டுஞ் சலிப்பற்று" என் னுந் திருப்பாட்டிற் காண்க. கலை முதற்குறை. (உஅ)

துரியமிருப்பதுசாக்கிரத்துள்ளே
நரிகள்பதினுலுநஞ்சுண்டுசெத்தது
பரியபுரவியும்பாரிற்பறந்தது
துரியமிருந்திடஞ்சொல்லவொண்ணுதே.

---

* காஞ்சிப்புராணம் சனற்குமாரப்படலம்.

(இ - ள்.) துரியமிருப்பது சாக்கிரத்துள்ளே - துரியப்பொருளாகிய சிவஞ் சாக்கிரப்பொருளாகிய ஆன்மாவினுள்ளேயிருப்பது. (அதனையாசாரியர நுக்கிரகத்தா லுணர்ந்தால்) நரிகள் பதினைலு நஞ்சுண்டு செத்தது - நரிகளாகிய ஞானேந்திரிய கன்மேந்திரிய வந்தக் கரணங்கள் பதினைலுந் தஞ்செயன்மறப்பாகிய நஞ்சைப்புசித்துக் கெடும். பரியபுரவியும்பாரிற்பறந்தது - பெரியகுதிரையாகிய ஆன்ம போதமு முலகிற்பற்றறப் பறந்துவிடும். துரியமிருந்திடஞ்சொல்ல வொண்ணதே - மேற்கூறிய துரியப்பொரு ளிருக்குமிடம் யாதென்னில்? * "அவனருளேகண்ணகக்காணினல்லால்" இவ்விடமெனக் கூறவியலாதென்றவாறு.

துரியம் - சுத்தநிலை; அதனை யாசாரிய ரநுக்கிரகத்தா லுணர்ந்தாலென்பது இசையெச்சமாகக்கொண்டுரைக்க. சாக்கிரம் - கருவிகளெல்லாங்கூடி நிற்கவறியுநிலை. பதினைன்கும் பொய்யை மெய்யெனக்காட்டி யேய்ப்பதனு லவைகளை நரிகளென்றார். அகங்கார மேவிட்டுச் செல்வதால் ஆன்மபோதத்தைப் புரவியென்றார். செத்தது, பறந்தது எனத்துணிவுபற்றி இறந்தகாலத்தாற் கூறினர். முதலடிக் கிவ்வாறன்றிச் சாக்கிரத்தினின்றுகொண்டுதானே துரியப்பொருளிருப்பதை யுணர்ந்தாலென வியைத்துரைப்பினுமாம். இவ்வாறுணரலாமென்பதனைத் "துன்னியசாக்கிரமதனிற்றுரியாதீதந்தோன்றமுயல் சிவாநுபவஞ்சுவாநுபூதிகமாம்" எனச் சிவஞானசித்தியார் அ-ஆஞ்சூத்திரம் ௩௪-ஆந் திருப்பாட்டிற் காண்க. (உகூ)

மாணிக்கமாலைமலர்ந்தெழுமண்டல
மாணிப்பொன்னின்றங்கமுதம்விளைந்தது
பேணிக்கொண்டுண்டார்பிறப்பற்றிருந்தா
ரூணுக்கிருந்தாருணராதமாக்களே.

(இ - ள்.) மாணிக்கமாலைமலர்ந்தெழுமண்டலம் - உலகில்விரிந்து தோன்று(மொழுங்காகிய)சிவமென்னுமாணிக்கமாலையானது. ஆணிப் பொனின்றங்கமுதம்விளைந்தது - ஆன்மாவாகிய வாணிப்பொற்ற கட்டிலேதங்கிநிற்க அவ்விடத்தே (சோதியாகிய) பேரின்பமுண்டாகா

* திருநாவுக்கரசுநாயனர் தேவாரம்.

நின்றது. பேணிக்கொண்டுண்டார்பிறப்பற்றிருந்தார் - அதனை விரும்பிக் குருவருளால் அறியுமுறையா லறிந்துகொண்டு நுகர்ந்தவரே பிறப்பினைநீங்கியிருந்தவராவர். ஊணுக்கிருந்தாருணராதமாக்களே - அதனையவ்வாறுணராத மனிதர்கள் (காலங்கள் வீணாகக்கழிய) உண்ணுதற்கே யிருந்தவராவர். (பிறப்பகலாரென்றவாறு.)

காலத்தை வீணாகக் கழிக்கலாகாதென்பதனைக் "காலமுண்டாகவேகாதல்செய்துய்ம்மின்" எனக்கூறிய திருவாசகத் திருப்பாட்டிற் காண்க. முதலிரண்டடியினு மிருவகைப்பிரபஞ்சத்தினுஞ் சிவநிற்குமாறு கூறியதெனவுய்த்துணர்க. மாணிக்கத்தைப் பொற்றகட்டிலிருக்கக் காண்பதே சிறந்த பார்வை அதுபோலச் சிவத்தையான்மாவிற் கண்டறிவதே சிறந்த காட்சியெனக் கூறினாரென வறிக. ஆணிப்பொன் - உரையாணிக்கமைந்த தங்கம். "அமுதமேசுவைநீர்மோக்கம்" என்பவாகலிற் பேரின்பத்தை யமுதமென்றார். விளையுமெனற்பாலதனை விளைந்ததென்றார். உணராதமாக்களென்பதற்கு இந்த மாணிக்கத்தி னியல்பையறியாது உலகியற்பொருளாகிய மாணிக்கக்கல்லையுணருமாக்களெனினுமாம். (௩0)

ஒன்றேகலப்பையுழவெருதஞ்சுண்டு
ஒன்றைவிட்டொன்றுவுழன்றுதிரியாது
ஒன்றைவிட்டொன்றையுழுதுண்ணவல்லாருக்
கன்றுநட்டன்றேயறுக்கலுமாமே.

(இ - ள்.) ஒன்றேகலப்பையுழவெருதஞ்சுண்டு - மனமாகிய கலப்பையொன்றே; அக்கலப்பையாலுழுதற்குப் பஞ்சேந்திரியங்களாகிய வெருதுக ளைந்துள்ளன. ஒன்றைவிட்டொன்று வுழன்று திரியாது - அவ்வொன்றாகிய மனக்கலப்பையினை நீக்கி (அப்பஞ்சேந்திரியங்களாகிய வெருதுகளிலே) ஒன்றாயினுந்தனித்துப் பந்தத்திலழுந்தி வருந்தித் திரியமாட்டாது. (அக்கலப்பையினை நீங்காது அவ்வெருதஞ்சுங்கூடி யீர்த்துச்சொல்லுமென்பது கருத்தாயிற்று.) ஒன்றைவிட்டொன்றை யுழுதுண்ணவல்லாருக்கு - அவ் வொன்றாகிய மனத்தைநீக்கி யொன்றாகிய பதியென்னு நிலத்தை யறிதலாகிய வுழவினைச் செய்து, அதனான் விளையும் பேரின்பமாகிய வுணவை யுண்ணும்படி வல்லமையுடையார்க்கு. அன்றுநட்டன்றேயறுக்கலுமாமே - ஒரு

காலத்திலே விதைத்துச் சிலகாலஞ்சென்றபின் விளைந்ததை யறுப்பதுபோலன்றி அப்பொழுதேநட் டப்பொழுதேயறுத்துப் பயன் கொள்ளலுமாகு மென்றவாறு.

அறிதலாகிய வுழவினைச்செய்தார் நடுதலாவது அப்பதியுடனழுந்தலாம். விளைவாவது சிவாநந்தவிளைவு. அந்தக்கரண நான்கனுண் மனத்தின்றொழின் முன்னிகழ்தல்பற்றி ஒன்றே கலப்பையென அதனைப் பிரித்துக்கூறினார். ஏகாரம் முன்னது பிரிநிலை; பின்னையது தேற்றம். குற்றுகரங்க டிரியாதுநின்றன. அருமைநோக்கி வல்லாரென்றார். (௩க)

ஊறுமருவியுயர்கரையுச்சியி
லாறன்றிப்பாயுமருங்குளமொன்றுண்டு
சேறன்றிப்பூக்குஞ்செழுங்கொடித்தாமரைப்
பூவன்றிச்சூடான்புரிசடையோனே.

(இ - ள்.) ஊறுமருவியுயர்கரையுச்சியில் - பரந்துதிரியுமருவியாகிய இந்திரியங்கட்கெட்டாது மேலுள்ளவிடத்திலே. ஆறன்றிப்பாயுமருங்குளமொன்றுண்டு - தனக்குவருவாயாகிய நதியின்றித் தனது கருணைவெள்ளமே யெல்லாவுயிர்ப்பயிர்களுக்குஞ்சென்று பாயத்தக்க சத்தியாகிய அரியகுளமொன்றுள்ளது. சேறன்றிப்பூக்குஞ் செழுங்கொடித்தாமரை - மாயையாகிய சேற்றின் சம்பந்தமின்றிச் சதானந்தமாகிய வளமுற்ற கொடித்தாமரை மலராநிற்கும். பூவன்றிச்சூடான் புரிசடையோன் - கட்டமைந்த சடையுடையானாகிய சிவபிரான்; அப்பூவையன்றி வேறுமலரை யணியமாட்டானென்றவாறு.

எனவே மாயாசம்பந்த வின்பத்தை மருவானென்பதாயிற்று; அன்றியும், * "மாயாவுருவினன்மாயாவுருவினை, யேயானேய்ந்தவரெம்மனோரே" எனக்கூறலால், மாயாசம்பந்தவின்ப நுகர்த லெங்ஙனமென்க. ஏனைக்குளங்களோ டிதனிடை வேற்றுமையறிதற்கு அருங்குளமென்றார். இங்ஙன மப்பூவையறிந்து சூடுமவரே அவனாவர் என்பது குறிப்பெச்சமாகக் கொள்க. (௩உ)

* சங்கற்ப நிராகரணம் உ0-ஆவது திருவகவல்.

சன்னங்குகைமூன்றுதானஞ்சுபச்சிலை
மின்னவரைத்துவைவெள்ளிபொன்னுயிடும்
வன்னம்பதியிந்தவாசிகொண்டேதிடிற்
சொன்னம்வாஞ்சித்தொன்றுமென்சிந்தையே.

(இ - ள்.) சொன்னம்வாஞ்சித்தொன்றுமென்சிந்தையே - சொன்னத்தைப்பெறவேண்டி யதற்குரியசாதனங்களிற் பொருந்திநிற்கின்ற வென்னகமே. சன்னங்குகைமூன்றுதானஞ்சுபச்சிலை, மின்னவரைத்துவை - நுண்ணிதாகிய அவஸ்தாத்திரயமாகிய குகை மூன்றுள்ளன; அவற்றில் பஞ்சாக்கரமாகிய ஐவகைப் பச்சிலைகளையும் குருவருளான் விளங்கவரைத்துவைப்பாய். (ஈண் டரைத்துவைத்தலாவது மூவகையவத்தையினு நிற்குமுறைகணித்தல்.) வன்னம்பதி - பொன்னிறமாகிய வருட்சத்தியி லழுந்திநிற்பாய். இந்த வாசிகொண்டேதிடில் - உச்சுவாசம், நிச்சுவாசமிரண்டையு மடக்கிச் சுழுமுனையிற் செலுத்துவாயாகில். வெள்ளிபொன்னுயிடும் - ஆன்மாவாகிய வெள்ளி பொன்னுகிய சிவமாய் விளங்குமென்றவாறு.

அவத்தாத்திரையமாவன - கேவல சகல சுத்தமென்னு மூன்றவத்தை யென்க. அவத்தைகளிற் பஞ்சாக்கரங்கணிக்குமுறையும், வாசியை யடக்குமுறையு முபதேசமுறையானுணர்க. அன்புமேலிட வருள்பதியுந்தன்மையது ஆதலால், அன்புமேலீடுகூறுவார்; அதனல், விளையுமருள்பதிதலைக்குறித்து வன்னம்பதியென்றுர். சுவாசத்தைக் கழியாதடக்குதல் இலாபமாகையால் அச் சுவாசத்திற்கு வாசியென்று பெயர்கூறுவர். வன்னஞ் சத்தியென்பதனை வருந் திருப்பாட்டுரையிலறிக. (௩௩)

வெளியிலிரேகைரேகைத்தலைச்சுழி
சுழியிலுகாரஞ்சுற்றிடும்வன்னி
நெளிதருகால்கொம்புநேர்விந்துநாதந்
தெளியுமவரேசிவசித்தாமே.

(இ - ள்.) வெளியிலிரேகை - பரமாகாசத்தில் நீளமாகிய இரேகையொன்று தோன்றும். ரேகைத்தலைச்சுழி - அவ்விரேகைத் தலையிடத்தில் வட்டமாகிய சுழியொன்று தோன்றும். சுழியிலுகாரஞ் சுற்றிடும்வன்னி - அச்சுழியிலே வர்னரூபியாகிய சத்தியினக்கரமாகிய உகாரஞ் சுற்றிநிற்கும். நெளிதருகால்கொம்புநேர்விந்து

நாதம்- (மேற்கூறியரேகையுஞ்சுழியும்) நெளிகின்ற காலாகிய நீள்வடிவாகவும், கொம்பாகிய வட்டவடிவமாகவுமெழுதி நேரத்தக்க நாதம், விந்துவென்னும் பெயர்பெறும். தெளியுமவரேசிவசித்தராமே - இவ்விரண்டையுமறிந்து தெளியுமவர்களே சிவசித்தராமென்றவாறு.

நெளிதல்-ஈண்டுமேற்கிளர்தல். தெளிதலாவது அவைதோன்றுமுறையு, மவற்றாற் பிரபஞ்சகாரியமாதலு மறிந்துதெளிதல். நாதம் விந்து என மாற்றியுரைக்க. வர்ங்கி - வன்னியென நின்றது. சத்தி வன்னரூபியாயுநிற்பதனைக், காஞ்சிப்புராணம், சனற்குமாரப்படலத்தில் "தேசுறுவன்னரூபியாச்சிறந்தசெல்வியை" எனக் கூறியதனு லறிக. (௩௪)

மாயனைநாடி மனனெடுந்தேரேறிப்
போயனநாடறியாதேபுலம்புவர்
தேயமுநாடுந்திரிந்தெங்கள்செல்வனைக்
காயநன்னாட்டிடைக்கண்டறிந்தேனே.

(இ - ள்.) மாயனைநாடி - பாலினெய்போலமறைந்து அந்தரியாமியா யிருக்குமிறைவனைத்தேடி. மனனெடுந்தேரேறி-மனமென்னு நெடியதேரிலேயுலாவி. போயனநாடறியாதேபுலம்புவர்-சென்று அத்தன்மையான அவனிருக்குமிடமறியாதே பலவாறு பிதற்றுவர். தேயமுநாடுந்திரிந்தெங்கள்செல்வனைக், காயநன்னாட்டிடைக்கண்டறிந்தேனே - எங்கள்செல்வனைப் பலநாடுகளும் பலநகரங்களுஞ்சென்று தேடித் தொழுது வாழ்த்திச் சிந்தித்ததனாற் சரீரமாகிய நல்லநாட்டின் கண்ணே பார்த்தறிந்தேன் என்றவாறு.

நாடுநகரங்களைக்கூறவே இனம்பற்றி மூர்த்தியுந் தீர்த்தமுங் கொள்க. எனவே மூர்த்தி தலந் தீர்த்தங்களை முறையாகத்தொழுமவர் அப் புண்ணியத்தாற் குருவருளெய்தி அகத்தேயறிவர் என்பது கருத்தாகக்கொள்க. இக் கருத்தை "மூர்த்திதலந்தீர்த்தமுறையாத் தொழுபவர்க்கு, வார்த்தைசொலச்சற்குருவும்வாய்க்கும்பராபரமே." எனக்கூறிய தாயுமானவர்பாடலாலுமறிக. அறிந்தோரையெல்லா முளப்படுத்தி யெங்கள்செல்வனையென்றார். மனம் - மனனெனப் போலியாயிற்று. மனனடந்தேரேறி என்பது பாடமாயின் மனத்தேரேறி நடந்தவெனக் கூட்டுக. (௩௫)

ஊமையெழுத்துடன்பேசுமெழுத்துறி
லாமையகத்துடனஞ்சுமொடுங்கிடு
மூமையமற்றதுவுள்ளொளிபெற்றது
நாமையமற்றதுநாமறியோமே.

(இ - ள்.) ஊமையெழுத்துடன்பேசுமெழுத்துறில் - ஊமையெழுத்தாகிய பேசாவெழுத்தென்கின்ற சிகாரமும், அதனுடன் பேசுமெழுத்தாகிய வகாரமுமாகியவிரண்டும் (அகத்தேயிரண்டறவழுத்துவிக்க) அவ்வாறு. ஆமையகத்துடனஞ்சுமொடுங்கிடும் - ஆமையுள்ளேதோன்றும் அவயவமொடுங்குமாறுபோலத் தன்னுள்ளே பஞ்சேந்திரியங்களுஞ் சேட்டையின்றி யொடுங்கிவிடும். ஊமையமற்றதுவுள்ளொளிபெற்றது - மேற்கூறிய விரண்டெழுத்தும் ஆன்மாவினகத்தே பரஞ்சோதிவடிவாய் நிலைபெற்றது. (என்றறிக.) நாமையமற்றதுநாமறியோமே - (அந்நிலை பெற்றதனைக் குருவருளால்) யாஞ் சந்தேகமின்றி யறிந்ததாகும், நாமாகிய வகங்காரமுள்ளவரையுங் கண்டறியோமென்றவாறு.

முதலடியின் கருத்தைக் கொடிக்கவி நான்காந்திருப்பாட்டுரையைப் பார்த்தறிக. ஐந்துங்கூறவே இனம்பற்றி யேனையகருவிகளையுங் கொள்க. ஒடுங்கிடுமெனவே பேரின்பவிளைவு கூறாதேயமைதல் பெற்றும். முதலடியிற், சிவோகம் பாவனைக்குரிய சாதனமும், இரண்டாமடியில், அதனாலெய்தும் பயனுங்கூறினர். மூன்றாமடியில், அச்சாதனத்தாலெய்தும் பொருளியல்பு கூறினர். நான்காமடியிற், சாத்தியத்தை யடைந்த சுவாநுபவமும், அதனை யறியமாட்டாதாரியல்புங் கூறினரெனக் கொள்க. விரிவஞ்சியிங்ஙனஞ் சுருங்கவுரைத்தமையறிக. மூன்றாமடியில், அம்மற்றது எனப்பிரித்துரைத்துக்கொள்க.

உந்திக்கமலத்துதித்தெழுஞ்சோதியை
யந்தித்தவண்ணமாருமறிந்தில
ரந்தித்தவண்ணமறிவாலறிந்தபின்
றந்தைக்குமுன்னேமகன்பிறந்தானே.

(இ - ள்.) உந்திக்கமலத்துதித்தெழுஞ்சோதியை - (குண்டலித்தானமாகிய) உந்தித்தாமரையிற் றோன்றிவிளங்கும் பரஞ்சோதியாகிய முதல்வன். அந்தித்தவண்ணமாருமறிந்திலர் - (ஆன்மாவி

னுடன் பொருந்தியிருந்ததை) அறியுமறிவில்லார் யாவருமறிந்திலர். அந்தித்தவண்ணமறிவாலறிந்தபின், றந்தைக்குமுன்னேமகன்பிறந் தானே - அங்ஙனம் பொருந்தியிருந்த விதத்தை அறிவுடையோரறி வாலறிந்தபின்னே தந்தையாகிய பதிக்கு முன்னிலையின் மகனாகிய வான்மா வெளிப்பட்டுத் தோன்றி யவனுட னிருந்தா னென்றவாறு.

ஓமத்தானம், பூசைத்தானம், தியானத்தான மூன்றனுள்ளே உந்திக்கமலத்தை ஓமத்தானமாகக் கூறியிருத்தலைச் சிவஞானபோதம் ஒன்பதாஞ்சூத்திரத்தில், "அஞ்செழுத்தா" லென்னுந் திருவெண் பாவா லறிக. அந்தித்தல் - பொருந்துதல்; முடிவாதலுமாம். (௩௭)

மண்டலத்துள்ளேமலர்ந்தெழுவாதித்தன்
பிண்டத்தினுள்ளேபேரொளியாயிடுஞ்
சென்றெடுத்தெட்டுத்திசைதொறும்போய்வரு
நின்றிடத்தேநிலைநேரறியாரே.

(இ - ள்.) மண்டலத்துள்ளேமலர்ந்தெழுவாதித்தன், பிண்டத் தினுள்ளேபேரொளியாயிடும் - அண்டமாகிய மண்டலத்தினுள்ளே யகண்டமாய் விரிந்தெழுகின்ற சோதியானது சரீரத்துள்ளேயும் பெ ருஞ் சோதியாய் விளங்கித் தோன்றுநிற்கும். சென்றெடுத்தெட்டுத் திசைதொறும்போய்வரும் - அது தன்னுள்ளே அநுக்கிரககுணத்தை யெடுத்து அட்டதிசையென வடக்கிக்கூறப்படு முலகெங்கும் வியா பகமாய் அநுக்கிரகத்தைப் புரிந்து வளராநிற்கும். நின்றிடத்தேநிலை நேரறியாரே - இவ்வாறு வியாபகமாய் நின்று எவ்விடத்து மநுக்கிர கித்து நிற்கு நிலைமையினை (அறிவிலார்) அறியுமுறையாகிய நேர்மை யை யறியாரென்றவாறு.

சென்று போய் எனக்கூட்டுக. சென்று போதல் - வியாபகமாய் இருந்தாங்கிருந்து எங்கு நிகழ்வனவற்றை யொருங்கே யறிதலென்க. ஏ - இரண்டுமசை. வருதல் - வளர்தல். திருக்கோவையாருரையி லறிக. (௩௮)

ஆதித்தனோடியடங்குமிடமறிந்து
சாதிக்கவல்லவர்தம்மையுணர்ந்தவர்
பேதித்துலகம்பிதற்றும்பிதற்றெலா
மாதித்தனோடியடங்கினவாறே.

(இ - ள்.) முதலிரண்டடிக்கு - ஞானமாகிய சூரியன் இரு வகைப் பற்றினையும் விட்டோடிக், குருவருளாற் றத்துவதாத்துவிக நிலையுணர்ந்து ஆன்மா ஒடுங்கிநிற்கு மிடமாகிய பதியையறிந்து சிவோகம்பாவனைசெய்யு முறைப்படி சாதிக்கவல்லவரே தம்மையறிந் தவராவார். பின்னிரண்டடிக்கு - இவ்வாறன்றி வேறுபடுத்துலகத்தி லேனையோர் தான முதலாகிய சாதனங்களாலெய்தும் பயன்களை மெய் யென்று பிதற்றுகின்ற வெற்றுரைப்பயன்களெல்லாஞ் சூரியனியங்கி யொடுங்குமாறுபோலச் சிறுகாலையிலே யுளபோலத்தோன்றி யொழியு மென்றவாறு.

இக் கருத்தைச் சிவஞானசித்தியார் சுபக்கத்தில், "தானமியாகந் தீர்த்தம்" என்னுந் திருப்பாட்டிற் காண்க. ஆதித்தனோடியடங்குமிட மறிந்து என்பதற்கு இவ்வாறன்றிச் சூரியகலை சந்திரகலையுடன் சென் றோடிச் சுழுமுனைவழியாலெய்தி யொடுங்குந்தானத்தை யறிந்தெனக் கூறலுமாம். (௩௧)

முற்பதினைந்தின் முளைத்துப்பெருத்திடும்
பிற்பதினைந்திற்பெருத்துச்சிறுத்திடு
மப்பதினைந்தையறியவல்லார்க்குச்
செப்பரியான்கழல்சேறலுமாமே.

(இ - ள்.) முதலிரண்டடிக்கு - சந்திரனுற்பவித்துப் பூர்வபக் கத்திற் பதினைந்து திதியினு மொவ்வோர் கலையெய்திவளராநிற்கும்; அங்ஙனம்வளர்ந்து அபரபக்கத்திற் பதினைந்து திதியினு மக்கலைகள் பெருத்ததினின்று சிறுகித் தேயாநிற்கும். அப் பதினைந்தை யறிய வல்லார்க்கு - அந்தப்பதினைந்து கலைகளும் வளர்தற்குந் தேய்தற்குங் காரணமாகிய அப் பதினைந்து திதிகளுங் காலதத்துவங் காரணமாகத் தோன்றியவையென்றறிய வல்லுநர்க்கு. (இம் மூன்றடியு மான்மா வின் சரீரத்தைக்குறித்துக் கூறிய வுவமான வாக்கியமெனக்கொண்டு ஆன்மாவின் சரீரங்களுற்பவித்து நாடோறும் வளர்தலுந் தேய்ந்து கெடுதலுமாம்; அங்ஙனம் வளர்ந்துதேய்ந்து கேடுறுதற்குக் காரண மானநாளுங் காலதத்துவத்தாலாகுமென வறியவல்லுநர்க்கு என்று பொருளியைத்துரைத்துக்கொள்க) செப்பரியான் கழல்சேறலுமா மே - (காலாதீதனாகிய) வாக்கிறந்த பூரணன் றிருவடியை யடைதலு மாகுமென்றவாறு.

இத் திருப்பாட்டின்கருத்தை விரித்துத் தாயுமானவர் "மாதத்தி லேயொருதிங்களுண்டாகிமடிவதைநின், போதத்திலேசற்றும்வைத்தி லேயே" எனக் கூறியிருத்தலும், சீவகசிந்தாமணியின் முத்தியிலம் பகத்தில் "மாய்தலும்பிறத்தலும்வளர்ந்துவீங்கலுந், தேய்தலுமுடை மைத்திங்கள்செப்புமால்" எனக் கூறியிருத்தலுங்காண்க. கடை யடியில் உம்மை உயர்வு சிறப்பு. முதன் மூன்றடியும் ஒட்டென்னு மலங்காரமாம். (௪௦)

உருவிலியூணிலியொன்றுமொன்றிலி
திருவிலிதீதிலிதேவர்க்குந்தேவன்
பொருவிலிபூதப்படையுடையாளி
மருவிலிவந்தென்மனம்புகுந்தானே.

(இ - ள்.) உருவிலி - உருவமெல்லாங்கண்டிதப்பொருளாக லால், நம்மனோர்போலவுருவமில்லாதோன்; எனவே அருளேயுருவா யினான். (இதனைச் சிவஞானசித்தியார் சுபக்கம் க-ஆஞ்சூத்திரம் சக, சஎ-ஆந் திருப்பாட்டிற் காண்க.) ஊணிலி - * "வெறுப்பொடு விருப்புத்தன்பான்மேவுதலிலாமையால்" நுகர்ச்சியில்லாதோன். ஒன் றுமொன்றிலி - † விச்சுவகாரணன், அந்தரியாமி, விச்சுவரூபி எனக் கூறப்படினும் ‡ "இவற்றின்றன்மைதனக்கெய்தலின்றித்தானேநிலவு சிரமலனாகிநின்றனன்" எனக் கூறப்படுதலால் ஒரு பொருளையும்பொ ருந்தாதோன். திருவிலிதீதிலி - "கேடுமாக்கமுங்கெட்ட திருவினார்" (எனத் தன்னடியார்க்கு மருள்புரிவோனாதலால்) ஆக்கக்கேடுகளு டைய திருவில்லாதோன். தேவர்க்குந்தேவன் - ஆதியந்தமில்லாதவ னாதலால் எல்லாக் கடவுளர்க்குந் தெய்வமாயினோன். பொருவிலி - தன்னையொத்த பொருளில்லாமையால் ஒப்பிலாதோன். பூதப்படை யுடையாளி - (இங்ஙன நின்றோனாயினும் உலகிற்கைந்தொழிலியற்று மாறு தன்னருளாற் கொண்டகோலத்திற்கேற்ப நடிப்பவனாதலால், அழித்தற் றொழிற்குவேண்டுஞ் சாதனம்போலக்கொண்ட) பூதப் படையுடையோன். மருவிலி - "தெரியலாநிலையலாற்றெரியாதவரிய

* சிவஞானசித்-சரு.
† ஷை ——— சஅ.
‡ ஷை உ-சூத்-க.

காட்சியன்" ஆதலால் யாருணர்வாலுஞ் சென்றெட்டொணுதோன். வந்தென்மனம் புகுந்தானே - அருளால் வந்தெளியனுகிய வென்னுட் புகுந்தருளியிருந்தான் என்றவாறு.

இஃதோர்வியப்பிருந்தவா றென்னையென்ப தெஞ்சிநின்றது. பூதப்படையுடையாளி யென்பதன் கருத்தைவிளக்கிக் கம்பரும் ஆரணியகாண்டங் கவந்தன்படலத்தில் "அழிப்பதற்கொருவனனவண் ணலுமறிதிரன்றே, யொழிப்பருந்திறற்பல்பூதகணத்தொடுமுறையு முண்மை" எனக்கூறுதல் காண்க. விளங்குமுறைப்படியாவது, சிவ ஞான சித்தியார் சுபக்கம். எட்டாஞ்சூத்திரத்தில் "சிந்திக்கச்சிந் திக்கத்தர்ப்பணத்தைவிளக்கவந்திடுமவ்வொளிபோல" எனக் கூறு மாற்றுலறிக. (சக)

வாயுமனமுங்கடந்தமனோன்மணி
*பேயுங்கணமும்பிறந்திட்டபெண்பிள்ளை
யாயுமறிவைக்கடந்தவரனுக்குத்
தாயுமகளுநற்றாரமுமாமே.

(இ - ள்.) முதலிரண்டடிக்கு - வாக்குமனுதீதமாய் (மலர்மணம் போலச் சிவத்தோடுநின்ற) மனோன்மணியாகிய பேய்களுக்கு மேனைச் சராசரக் கூட்டங்களுக்குந் தானுதாரமாய் நிற்றலால் அவைகள் பிறந் திடமாகிய பெண்ணுகியவள். பின்னிரண்டடிக்கு - ஆராய்கின்ற பாச வறிவு பசுவறிவுகளைக் கடந்துநின்ற வரனுக்குத்தாயாகியு மகளாகியு நல்ல மனைவியாகியு மாயினுளென்றவாறு.

பேய் தேவகணத்திற் கீழான கணமாதலால் அதனைக்கூறவே ஏனைக் கணமுமடங்குமெனக்கொள்க. பிறந்த என்னும் பெயரெச்ச வீறு தொக்கது. அரன் - உயிர்கட்குப் பாசத்தையரிப்பவன். சத்தி தத்துவத்தினின்றுஞ் சதாசிவ தத்துவந் தோன்றுதலிற் றுயென்றும், சிவதத்துவத்தினின்றுஞ் சத்திதத்துவந் தோன்றுதலின் மகளென் றும், போகியாயிருந் துயிர்கட்குப் போகத்தைப்புரியுமாறு அச்சத்தி யை மனைவியாக மணந்திருத்தலாற் றுரமென்றுங் கூறினுர்; இக்கடை யடியின் கருத்தைத் திருக்கோவையாரிலே "தவளத்தநீறணியுந்தடங்

* பேயுங்கணமும் பெரிதுடைப் பெண்பிள்ளை என்பதும் பாடம்.

"தோளண்ணறன்னொருபா, லவளத்தனுமகனுந்தில்லையான்" எனக் கூறியிருத்தல் காண்க. (௪௨)

இருவரிருந்திடமெண்டிசையண்ட
மரிபிரமாதிகளாருமறிந்திலர்
பரிதியுஞ்சோமனும்பாரும்மிடத்தே
சுருதிமுடிந்திடஞ்சொல்லவொண்ணாதே.

(இ - ள்.) முதலடிக்கு - சிவமுஞ்சத்தியுமாகியவிருவருமிருந்த விடம் யாதென்னில்? எண்டிசையோடுகூடியவண்டமாம்; எனவே அண்டத்தினுள்ளும் புறம்புமாமென்க; அண்டபிண்டமவைசமமாக லாற் பிண்டமுமாம் எனக்கொள்ளத்தகும். இரண்டாமடிக்கு-இவ்வா றண்டமும் பிண்டமுமாகிய வெங்குநிறைந்திருக்கிற அவ் விருவரை யுஞ் சத்திநிபாத முறைமையா லரிபிரமர் முதலோர் யாவருமறிந்தா ரில்லை. மூன்றாமடிக்கு - அறியவிரும்பில் உம்மிடத்தே நடக்கும் பிங்கலை இடைகலையொடுங்குமுறையறிந்து கண்டறியுங்கள். நான்கா மடிக்கு - அதுவே வேதாந்தமாகிய விடமாம், வாக்கிறந்தபூரணமாத லால், அதனையுணர்ந்தாருணர்வதன்றி யிவ்வாறென்று சொல்லமுடி யாதென்றவாறு.

ஏ - இரண்டுமசை. (௪௩)

வாழையைச்சூரைவலிந்திடங்கொண்டது
வாழைக்குச்சூரைவலிதுவலிதென்பர்
வாழையின்சூரையைவன்றண்டஞ்செய்தக்கால்
வாழையிடங்கொண்டுவாழலுமாமே.

(இ - ள்.) முதலடிக்கு - வாழையாகிய வான்மாவைச் சூரை யாகிய ஆணவமலமானது (விழியைமறைக்குமிருள்போல அறிவை மறைத்துமூடலால்) தனக்கிடமாகக்கொண்டது. இரண்டாமடிக்கு- அங்ஙனமறைக்கும்வலியுடைமையால் அவ்வான்மாவினு மாணவமல மானது வலியுடையது வலியுடையதென்பர். மூன்றாமடிக்கு - அவ் வினியவாழையாகிய வான்மாவானது (முறைப்படி) சூரையாகிய வா ணவமலத்தை வன்மையாகக் கூறுபடுத்திச்சிதைத்தால். நான்கா மடிக்கு - அவ்வாழையாகிய வான்மாவானது சிவத்தை யாதாரமாகக் கொண்டு பேரானந்தப் பெருவாழ்வினிருத்தலுங் கூடுமென்றவாறு.

ஆணவமலஞ்சிதையச் சிவத்தையடைவ தெவ்வாறெனின்? "கரியவாணவந்தேயுமாகலந்தநஞ்சத்தி, யுரியதாஞ்சிவபுண்ணியமுடன்விராயூட்டும், பெரியவாட்கணுப்பின்மலபாகமாம்பின்னர்;விரியுஞ் சத்திநிபாதம்பின்வினையொப்புமேவும்" எனத் திருவானைக்காப் புராணம் ஞானவுபதேசப்படலத்திற் கூறியதனாலறிக. வாழையைப் போலச் சந்தானமுற்றுவருதலால் ஆன்மாவை வாழையாக வுருவகமாக்கியும், சூரையைப்போலடர்ந்து மறைப்பதா லாணவமலத்தைச் சூரையாக வுருவகமாக்கியு முரைத்தாரென்க. சூரை - ஒருபடர்செடி. அடுக்கு அச்சம்பற்றிவந்தது. (சச)

கோத்தகோவைகுலையக்குருபரன்
சேர்த்தசேவடிசென்னியில்வைத்தொரு
வார்த்தைசொல்லிவழக்கறுத்தாண்டவன்
பார்த்தபார்வைபசுமரத்தாணியே.

(இ - ள்.) முதலடிக்கு - அநாதியேபற்றியவாணவாதி பாசக்கொத்தின் வலிநிலைகுலையத் தீபகம்போலத் தேசிகோத்தமனாகவந்து. சேர்த்தசேவடிசென்னியில்வைத்து - அருள்வடிவாகச்சேர்த்தசிவந்த திருவடிக்கமலத்தைச்சிரமேற்சூட்டி. ஒருவார்த்தைசொல்லி - (எவ்வெவகோட்படுபொருளுந் தன்னுள்ளடக்கிநிற்கும்) ஒருவார்த்தையாகிய மகாவாக்கியமெனப்படும் பஞ்சாக்கரமொழியினைத் திருவாய் மலர்ந்தருளி. வழக்கறுத்தாண்டவன் - அப்பாசத்தின் றொடர்ச்சி முற்றக் கெடுத்தாண்டநாயகனாகிய பரசிவன். பார்த்தபார்வைபசுமரத்தாணியே - நோக்கியருளிய நோக்கானது பச்சைமரத்தி லிருப்பாணி சென்றிருந்தாற்போல மீளாதழுந்தியிருந்ததென்றவாறு.

தேசிகனாகவருவது இருவினையொப்பின்கண் மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என நால்வகைச் சத்திநிபாதமுறையின்வைத்து அரிதினுணர்த்தவேண்டுதலிற் சகலவர்க்கத்திற்கென்க; இதனைச்சித்தியார். அ-ஆஞ் சூத்திரம், உ-ஆவது திருப்பாட்டிற் காண்க. திருவிளையாடற்புராணம் வாதவூரடிகளுக் குபதேசித்தபடலத்தில் "பதகமலமுஞ்சூட்டி, வண்ணமாமலர்ச்செங்கரஞ்சென்னிமேல்வையா" எனக் கூறியிருத்தலால், சேவடிசென்னியில்வைத்தெனக் கூறவே அதன்பின் அஸ்தமஸ்தக சையோகம் பண்ணுதலாகிய பரிசதீக்கையு

மடங்குமாறு கொள்க. பார்வைகூறவே அதன் வழித்தான மானதமு மடங்குமாறு கொள்க. † பலவிதமாசான் பாசமோசனந்தான் பண்ணும்படி நயனத்தருள் பரிசம்வாசக மானதமே - யலகில்சாத்திரம் யோகமௌத்ரா தியநேகமுள" எனக்கூறு மெழுவகைத்தீக்கையு ளீண்டுநான்குரைத்தல்காண்க. பாவனையால் ஆணவமும், மந்திர வுபதேசத்தாற் கன்மமும், பரிசத்தான்மாயையுநீங்குமென்பர். (சரு)

தான்வரைவற்றபின் றுரைவரைவது
தானவனானபின் றுரைநினைவது
காமனைவென்றகண் ணுரையுகப்பது
தூமொழிவாசகஞ்சொல்லுமினீரே.

(இ - ள்.) முதலடிக்கு - தான்முன்புதன்னையாராய்ந்து "சாதி குலம்பிறப்பென்னுந்தடஞ்சுழியிற்றடுமாறுத" லாகியகொள்கைநீங் கியபின்பு "அப்பனீ யம்மைநீ யன்புடைய மாமனு மாமியுநீ யொப்பு டைய சுற்றமுநீ" எனக்கொள்வதன்றி யெவரைத்தனக் குரிமையா யுவந்துகொள்வது. இரண்டாமடிக்கு - "சிவன்றன்றிருக்கடைக்கண் சாத்திச்செனனமொன்றிலேசீவன்முத்தனாக, வைத்தாண்டுமலங்கழு விஞானவாரிமடுத்தானந்தம்பொழிந்துவரும்பிறப்பையறுத்து, முத் தாந்தப்பாதமலர்க்கீழ்" வைத்தவாறு சிவோகம்பாவனைமுதிர்ச்சியாற் றான் சிவமாகியபின் "பதிகரணங்களெல்லாம்பசுகரணங்களாக" ஆனந் தமொன்று மேதினைத்தலன்றி யெவரையுநினைத்தல் கூடாது. மூன்று மடிக்கு - ஆதலாற்பெத்ததசை முத்திதசையிரண்டினு மதனைச் செயித்த நெற்றிக்கண்ணுடையாரையே யுகந்துகொள்ளத்தக்கது. நான் காமடிக்கு - அதற்குபாயமாவது, எல்லாமொழியினு மிகப்பரிசுத்த மொழியாகிய "பெருவான்பொருடன்பெரும்பெய"ராகியபஞ்சாக்கரத் தை விதிப்படி யுச்சரிப்பீரென்றவாறு.

மூன்றுமடிக்குத் "தத்தருமதருமியாய்த் தத்தருமமெனப்பட்ட முற்றுணர்ச்சிமுதலிய வெண்குணங்களையுடையனாயிருத்தல்" கருத் தாகக் கொள்க. (சசா)

---

† சித்தியார் அ-ஆஞ் சூத்திரம் ௩-ஆந் திருப்பாட்டு.

வேதாந்தஞ்சித்தாந்தமென்னுமிரண்டுக்கும்
போதாந்தமானபுரந்தரன்வாழ்வொன்று
நாதாந்தமானஞானங்கைகூடாதேற்
சேதாந்தமானசெனனமொழியாதே.

(இ - ள்.) முதலிரண்டடிக்கு - "வேதநூல்சைவநூலிரண்டே நூல்கள்" எனவும், "வேதாந்தத்தெளிவாஞ்சைவசித்தாந்தம்"எனவுங் கூறப்படுதலால், வேதமுடிவாகிய வேதாந்தம் ஆகமத்தின்முடிந்த முடிபாகிய சித்தாந்தமென்னு மிரண்டிற்கு ஞானாந்தமாய் விளங்கி யிருக்கின்ற புரந்தரனாகிய பரசிவ னிற்குநிலையொருவகையே யிரு வகையன்று. எனவே யிதனையறியு முணர்ச்சியில்லாதா ரிருவகை யாகப் பிணங்கிக்கூறுவரென்பது கருத்தாயிற்று. பின்னிரண்ட டிக்கு - முப்பத்தாறு தத்துவத்தின்முடிவாய்விளங்குஞ் சிவத்தை யுணரவல்ல சிவஞானமானது சிவபுண்ணிய மிகுதியாற் சைவசமஸ் காரமுறைப்படி கிட்டாதாயின் மிக்ககேட்டை விளைப்பதாகிய வினைப் பயனுகரச் சென்மநீங்காதென்றவாறு.

புரந்தரன் - சத்துருநகரத்தை யழிப்பவன் என்பது பொருளாகக் கொள்க. சேதாந்தம் - ஒருபொருட்பன்மொழி. (௬௭)

ஆதாரமாறல்லவப்பானடமல்ல
வோதாவொளியல்லவுன்மந்திரமல்ல
வேதாகமத்தின்விளங்கும்பொருளல்ல
சூதானநந்திசொல்லுபதேசமே.

(இ - ள்.) கடையடிமுதலாக நான்கடிக்கு - என்குருமூர்த் தியாகிய நந்திபெருமான் திருவாய்மலர்ந்தருளிய தந்திரமானவுபதே சப்பொருள் முக்கோணஞ் சதுர முதலியவடிவாகிய மூலாதாரஞ், சுவா திட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்கினை யென்று சொல்லப்படாநின்ற ஆறுதாரப்பொருளுமல்ல; அவற்றிற்கப்பாலுள தாகிய பிரமரந்திரத்திலே நடம்புரிவதாகிய பொருளுமல்ல, சொல்லு தற்கொண்ணாத பரஞ்சோதியுமல்ல, தியானிக்கத்தக்க மந்திரமூர்த் தியுமல்ல, வேதசிவாகமத்திலே விளங்காநின்ற பொருளுமல்லவென்ற வாறு.

பின்னையாதெனில்? இவையன்றியென்னுட்கலந்து "பேதம் அபேதம் பேதாபேதம் என்னு மூன்றியல்புந்தோன்ற" நின்றபொருளுமாமென்பது கருத்தாகக்கொள்க. ஆருதாரப்பொருள் முறையே விநாயகர் முதலோரென்க. (சஅ)

முப்பதுமுப்பதுமுப்பத்தறுவருஞ்
செப்புமதிலுடைக்கோயிலில்வாழ்பவர்
செப்புமதிலுடைக்கோயில்சிதைந்தபின்
ஒப்பிலனைவருமோட்டெடுத்தாரே.

(இ - ள்.) முதலிரண்டடிக்கு - (புறக்கருவி யகக்கருவியாகிய தொண்ணூற்ருறு தத்துவங்களுள்) புறக்கருவியாகிய அறுபது தத்துவமும் அகக்கருவியாகிய முப்பத்தாறு தத்துவமுமாகச் செப்புகின்ற கோட்டையினையுடைய கோயிலாகிய சரீரத்தில் வாழாநிற்பவர். பின்னிரண்டடிக்கு - அவ்வாறு செப்புகின்ற மதிலையுடைய கோயிலாகிய சரீரம் " வினைதானொழிந்தாற்றினைப்போதளவுநில்லாதுகண்டாய் " என்றபடி சிதைவானபின் ஒன்ருேடொன் ருெப்பில்லாத அத் தத்துவங்களாகிய வனைவருமச் சரீரத்தைவிட் டுடனே புறப்பட்டோட்டமெடுத்தாரென்றவாறு.

புறக்கருவி அகக்கருவிகள் தொண்ணூற்ருறென்பதையும், அவற்றின் ருேற்றமுதலிய வற்றையும், மதுரைத் தமிழ்ச் சங்கத்திலச்சிட்டிருக்கிற ஞானமிர்தக்கட்டளையிலே நன்குவிளங்குதல்காண்க.(சகூ)

ஏற்றமிரண்டுளவேழுகிணறுள
மூத்தானிறைக்கவிளையான்மடைமாறப்
பாத்தியிற்பாயாமற்பாழெங்கும்பாய்ந்தது
கூத்திவளர்த்தகோழிப்புள்ளாமே.

(இ - ள்.) ஏற்றமிரண்டுள - புண்ணியபாவமாகிய துலாமரமென்கின்ற வேற்ற மரங்களிரண்டுள்ளன. ஏழுகிணறுள - (அவற்றைப்பற்றி நின்றுமுகந்து கொள்ளப்படுகின்ற சுவாசமாகிய நீருள்ள) எழுவகைத்தோற்றமாகிய கிணறுகளுள்ளன. மூத்தானிறைக்க - பிங்கலையென்கின்ற சூரியகலையாகிய மூத்தவன் நிச்சுவாசம் பண்ணமல் உச்சுவாசம்பண்ண. இளையான் மடைமாற - இடைகலையென்

கின்ற சந்திரகலையாகிய விளையவனும் அச் சுவாசமாகிய நீர் போதற் குரியவழியிற் செல்லாதபடி மாறுதல்செய்ய; எனவே தானு நிச்சுவா சம் பண்ணும வுச்சுவாசம்பண்ண என்பது கருத்தாம். இவ் விரண் டிற்கு மிரண்டுகலையு மாறிமாறி நடக்கவென்பது கருத்தாகக்கொள்க. மூன்றுமடிக்கு - ஒவ்வொருநாளும் விடுஞ்சுவாசமென்கின்ற இருபத் தோராயிரத் தறுநூறுகிய அவ் வாயுவாகியநீர் சுழுமுனைவழியிற் சென்று கும்பகமாகிய பாத்தியிலே செல்லாமற் பாழாய் வெளியெங் குஞ் சென்றுபோயிற்று. கடையடிக்கு - இஃதெவ்வாறுயிற்றெனில்? கூத்தியானவள் வளர்த்துவிட்ட கோழிப்பறவைபோலப் பயனற்றுப் போயின வென்றவாறு.

தலைவன்விசாரிப் பில்லாமற் பயனற்றுப்போயின வென்பது கருத்து. (ரு௦)

உருகிப்புறப்பட்டுலகைவலம்வந்து
சொருகிக்கிடக்குந்துறையறிவாரில்லை
சொருகிக்கிடக்குந்துறையறிவாளர்க்கு
உருகிக்கிடக்குமென் னுள்ளன்புதானே.

(இ - ள்) முதலடிக்கு - மனத்திலன்புகனிந் துருகிவெளி யே புறப்பட்டுலகத்தை வலமாகவந்து ; எனவே மூர்த்திதலந்தீர்த்த முறையாத்தொழுதுவலம்வந்து என்பது கருத்து. இரண்டாமடிக்கு- அங்ஙனம்வந்தாற் சிவபுண்ணிய மேலீட்டினு லிருவினையொப்புவர அப்பொழுது ஓர் வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கிறபடியினு லே அக் குருவருளாற் சிவோகம் பாவனையைத் தலைப்பட்டு அதன் கணடங்கிக் கிடக்குந்துறையை யறிவார்களில்லை. பின்னிரண்டடிக்கு- அங்ஙனமடங்கிக்கிடக்கின்ற துறையறிவாளராகிய ஞானிகட்கு என் னுள்ளன்பாயிருக்கின்ற சிவந்தானே திருவுளமிரங்கிவிடாது பற்றிக் கொள்ளுமென்றவாறு.

என்னுளன்பென்றது சிவத்தை. "அன்புசிவமிரண்டென்பரறி விலார்" என விந்நூலாசிரியர் கூறியருளியதுகாண்க. சிவந்திருவுள மிரங்கிவிடாதுபற்றிக் கொள்ளுமென்பதனை "உளத்தவன்றுனின்றக லப்பாலேசோகமெனப்பாவிக்கத்தோன்றுவன்வேறின்றி" எனக் கூறிய சித்தியார். கூ-ஆஞ் சூத்திரம். எ-ஆந் திருப்பாட்டிற் காண்க.

பின்னிரண்டடிக் கிவ்வாறன்றி அங்ஙனமடங்கிக்கிடக்கின்ற துறை யறிவாளராகிய மெய்ஞ்ஞானிகட்கு "ஈசனேசரொடுஞ்செறிந்திட்டங் கவர்தந் திருவேடமாலயங்களெல்லாமரனெனவேதொழுதிறைஞ்சி" என்றருளியபடி என்னுள்ளன்புருகி யென்வசமற்று அவன் வசத்தே தங்கிக்கிடக்கும் எனவுரைப்பினுமாம். (ருக)

எட்டினிலெட்டுமதிலொட்டிரட்டியுங்
கட்டியைவிட்டுக்கலந்துண்ணமாட்டாமற்
பட்டினிவிட்டும்பலவிதந்தேடியு
மெட்டுமிரண்டுமறியாதமாக்களே.

(இ-ள்.) கடையடிமுதலாக நான்கடிக்கு-எட்டாகிய அகரமும் இரண்டாகிய உகரமும் ஆகிய பிரணவநிலையை யறியாதமனிதர்கள் (என்புதசைபோர்த்த) கட்டியாகிய தேகப்பற்றைவிட்டுச் சோடசகலை களையுடைய சத்தியையு மதனுடன் மருவியிருக்கின்ற சிவத்தையுங் கலந்து சிவாநந்தத்தை யநுபவிக்கமாட்டாமல் ஒருவித வாகாரமு மின்றிப் பட்டினியிருந்துங் காயகற்பமுதலிய பலவிதங்களை யாராய்ந் தும் வருந்துவ ரென்றவாறு.

சோடசகலை ஞானாமிர்தத்திற் காண்க. அகர உகரங்கள் பிரணவ மாதலை முன்னர்க்காட்டப்பட்டது. கலந்துண்ணலாவது "தாயுடனே சென்றுதாதையைக்கூடிப்பின்றாயைமறந்-தேயுமதே நிட்டையென்று னெழிற்கச்சியேகம்பனே" எனப் பட்டினத்தடிகள் கூறியருளிய திரு வாக்கா லுணர்க. வருந்துவரென்ப திசையெச்சமாக வருவித்து ரைக்க. இது கொண்டுகூட்டுப்பொருள்கோளாத லறிக. (ருஉ)

ஈசனிருப்பனிருவினைக்கப்புற
மீசனுலகுக்கிறைதெய்வமாவது
வீசனதுவிதுவென்பரறிவிலார்
தூசுபிடித்தவர்தூரறிந்தாரே.

(இ - ள்) முதலடிக்கு - ஈசன் (நம்மனோர்போலவினைவயத்தா னன்றி யியல்பாகவே பாசங்களினீங்கியவ னாதலால்) இருவினையைக் கடந்தப்புறத்தேயிருப்பன், இரண்டாமடிக்கு - உலகத்திற்கிறையாகிய தெய்வமாவது இயல்பாகவே பாசங்களினீங்கிய அவ் வீசனே. மூன்று

மடிக்கு-இவ்வாறுணருமறிவில்லார் (சுட்டிறந்துநின்ற அவ் வீசனை) அதுவென்று மிதுவென்றும் வெவ்வேறு வகையாகச் சுட்டிக்கூறு நிற்பர்; அவனிருப்பையறியார் என்பதாயிற்று. நான்காமடிக்கு - படைமுன்னணியாகிய தூசியை யறிந்து பிடித்தவரே மூலப்படை யையு மறிந்துபிடித்தவராவர்; அல்லாதவர் ஆகாரென்றவாறு.

இஃதோருவமை யெடுத்துக்காட்டியவதனால் அவனிருப்பை யறிந்தவரே அவனிறையாகிய தெய்வமாவதையு மறிந்தவராவரென் பது கருத்தாயிற்று. இறை - எப்பொருளினுந் தங்குகின்றவன். அறிந்து என்பதனைப் பிடித்தென்பதனோடும் பிடித்து என்பதனை அறிந்தென்பதனோடுங் கூட்டிப் பொருளுரைக்க. (ருங)

பெண்ணல்லவாணல்லபேடல்லமூடக
முண்ணின்றசோதியையுற்றறிவாரில்லைக்
கண்ணின்றிக்காணுஞ்செவியின்றிக்கேட்கு
மண்ணல்பெருமையையாய்ந்தவர்மூப்பே.

(இ - ள்.) முதலிரண்டடிக்கு-வெளிப்படையாகக் காணப்படும் பெண்வடிவமுமல்ல, ஆண்வடிவமுமல்ல, அலிவடிவமுமல்ல, இரக சியமானது, தன்னுள்ளே விரவிநின்ற சோதிவடிவத்தை யாராயு முறைப்படிநோக்கி யுணர்வாரில்லை. பின்னிரண்டடிக்கு - (எல்லாந் தன்வயத்தனாவிருத்தலால்) நம்மனோர்போலக் காணுங்கண்ணின்றிக் காணவுங் கேட்குஞ்செவியின்றிக் கேட்கவும் வல்லதலைவன் பெருமை யை யாய்ந்தவரே யாவர்க்குந் தலைமையோரென்றவாறு.

முதலடியின் கருத்தை "பெண்ணாகியாணாயலியாய் - இத்தனையும் வேறாகி" யெனக்கூறியருளிய திருவாசகத் திருப்பாட்டிற் காண்க. மூப்பு - மூப்பினையுடையார்க்கு ஆகுபெயர். மூப்புத் தலைமையென் பதனைக் கோயின்மூத்த திருப்பதிகமெனக் கூறியதனாலறிக. (ருச)

விண்ணின்றிழிந்துவினைக்கீடாமெய்க்கொண்டு
தண்ணின்றதாளைத்தலைகாவன்மேல்வைத்து
வுண்ணின்றுருக்கியோரொப்பிலாவானந்தக்
கண்ணொன்றுகாட்டிக்களிம்பறுத்தானே.

(இ - ள்.) நான்கடிக்கும் - பரநாதவெளியினின்றும் வெளிப் பட்டு (வேடர் மானைக்காட்டி மானைப்பிடிப்பதுபோல என்னையடிமை

கொள்ளுமாறு) நம்மனோர்போல இருவினைக்கீடாகிய மானிட வடி வெடுத்துவந்து, (உலகமெல்லா மொடுங்குதற்குந் தோன்றுதற்குங் காரணமாக) நின்ற தன்னுடைய திருவடியைக் காப்பாகவென்றலை மேல்வைத்துச் சூட்டி, என்னுள்ளே யறிவுக்கறிவாக விளங்கிநின்று, தற்போதத்தைக்கரைத்து, ஒருவமானமில்லாத வானந்தங்கொள்ள வல்லதாகிய வொரு ஞானக்கண்ணை யுதவியருளிக் களிம்பாகிய வாணவ மலத்தை யறுத்தானென்றவாறு.

அவனருளிருந்தவாறென்னை யென்பது குறிப்பெச்சம். செம்பிற் களிம்புபோல அநாதியே ஆன்மாவுடன் ஆணவமலமுண்மையின் அதனைக் களிம்பாக வுருவகஞ்செய்தார். அநாதியுள்ளதெவ்வாறு நீங்குமென்னில்? "செம்பிற், காணவுறுகளிம்பிரதகுளிகைபரிசிக் கக்கழியுஞ்செம்புருநிற்கக்கண்டாமன்றே, தாணுவின்றன்கழலணையத் தவிருமலம்" என்றருளிய திருவாக்காலறிக. இது குருவடிவாகவந் தநுக்கிரகஞ்செய்புமுறை கூறியவாறு. (ருரு)

வண்ணானொலிக்குஞ்சதுரப்பலகைமேற்
கண்ணாறுமோழைபடாமற்கரைகட்டி
*விண்ணாற்றைத்தேக்கிக்குளத்தைநிரப்பிட்டு
வண்ணாந்துபார்க்கவழுக்கற்றவாறே.

(இ-ள்.) முதலிரண்டடிக்கு-வண்ணானாகிய வான்மாவானவன் ஒலித்தல் செயப்படுஞ் சதுரப்பலகையாகிய வந்தக்கரணங்களின்மேலுள்ள இந்திரியங்களாகிய கண்ணாற்றின்வழியும் மோழையாகிய பஞ்சப்புலன்வழியும் புகாமற் கரையடைத்து, (கரையடைத்தலாவது உச்சுவாசம் நிச்சுவாசமிரண்டையு மடக்குதலாம்) விண்ணாற்றைத்தேக்கி-விண்ணாறாகிய சுழுமுனை மார்க்கத்திலே பிராணவாயுவைச் சலனமற நிறுத்தி - குளத்தை நிரப்பிட்டு - சந்திரமண்டலத்தை மூலாக்கினியாலிளகப்பண்ணி யொழுகுமமுதத்தைக் குளமாகிய வுடலமுட்டநிரப்பி-கடையடிக்கு - மேனோக்கிப் பரஞ்சோதியைப்பார்த்துத் தியானிக்க அழுக்காகிய வாணவமல நீங்கியவாறும்; எனவே சிவசாரூபமெய்துமென்றவாறு.

---

* விண்ணாறுபாய்ச்சி யென்பது அச்சுப்பிரதிப்பாடம்.

ஒலித்தல்-ஆடையழுக்ககற்றல். நால்வகைவாக்கு மந்தக்கரணங் களுடன் கூடியொலித்தலால் அந்தக்கரணத்தைப் பலகையென்றார். கண்ணறு - ஒவ்வோரிடங்களினுஞ் சென்றுபாயும் வாய்க்கால். மோழை - கீழாருகிய ஓட்டை. இத் திருப்பாட்டின் கருத்தைச் சிவ ஞானசித்தியார். எட்டாஞ்சூத்திரம், இருபத்தொராவது கவியிற் காண்க. விண்ணற்றைத்தேக்கி யென்றதன்பின் ஆருதாரப்பொருளுணர்தன் முதலியவற்றைத் தந்துரைத்துக்கொள்க. (ருசா)

மூலநாடிமுகட்டறையுச்சியி
னாலுவாசனடுவேசிவாலய
மேலைவாசல்வெளியுறக்கண்டபின்
காலன்வாசல்கனவிலுமில்லையே.

(இ - ள்.) முதலிரண்டடிக்கு-எழுபத்தீராயிர நரம்புக்கு மூலமாயுள்ள சுழுமுனை நாடியின் மேலுள்ளதாகிய கபாலத்தினுச்சியாகிய பிரமரந்திரத்தினடுவே நாலு திசைவாசலையுடையசிவாலயமொன்றுண்டு. பின்னிரண்டடிக்கு - மேல்வாசலிலே நின்று வெளியாகிய சச்சிதானந்தத்தைப் பொருந்தத் தெரிசித்தபின் இயமன கரத்தின் வாசலைக் (காண்பது) கனநிகழ்ச்சியினுமின்றென்றவாறு.

எனவே யிறவாப்பேரின்பமெய்து மென்பது கருத்தாயிற்று. மேலை என்றதில் ஐ சாரியை. புறத்தே சிவாலயச் சேவைசெய்வது போல அகத்தேயுள்ள சிவாலயச் சேவைசெய்யவேண்டுமென்பதுகூறியருளினாராயிற்று. நாலுவாசலென்பதற்குச் சரியை கிரியை யோக ஞானமாகிய நாலுவாசலென்றுங் கூறுவர். (ருஎ)

அப்பினிற்கூர்மையாதித்தன்வெம்மையா
லுப்பெனப்பேர்பெற்றுருச்செய்தவவ்வுரு
வப்பினிற்கூடியங்கொன்றனவாறுபோற்
செப்பிடிற்சீவன்சிவத்துளடங்குமே.

(இ - ள்.) முதலிரண்டடிக்கு-நீரிற்கூடியிருந்த வுவர்ப்பானது சூரியன் வெப்பங்கூடினகாலத்து அவ் வுவர்ப்பானது திரண்டு உப்பென நாமம்பெற்று ரூபமாகச்செய்தஅவ் வுப்பின் வடிவானது. மூன்றாமடிக்கு - நீரிற்கூடி யதனிடத்துக் கலந்து தனது கண்டிப்பு

நீங்கி யங்ஙே யொன்றுனவிதம்போல. நான்காமடிக்கு - பேசுங்காற் சீவன் சகசமலங்கெடப் பாசிவத்துட் கலந்து தன் றன்மைநீங்கிச் சிவத்தின்டிமையாய்ச் சிவாநுபவத்தைப் பெற்றிருக்கு மீளக்கவர்சி யில்லை யென்றவாறு.

இக் கருத்தைச் சிவஞானபோதம், பதினொராஞ் சூத்திரவுரை யில், "நசித்துமலமப்பணைந்தவுப்பினுளநசித்துச்சேடமாம், கப்பின்று மீசன்கழல்" எனக் கூறியருளிய திருவெண்பாவிற் காண்க. கூர் - உவர்ப்பு. (ருஅ)

கோயிலுமஞ்சுளகோபுரமூன்றுள
கோயிலடைக்கக்கதவோரிரண்டுள
கோயிற்றிறந்துகும்பிடவல்லார்க்குக்
கோயிலுக்குள்ளேகுடியிருந்தானே.

(இ - ள்.) நான்கடிக்கும் - ஞானேந்திரியம் அந்தக்கரணஞ் சிவ தத்துவஞ் சத்திதத்துவம் ஆன்மாவாகிய வைவகைக் கோயிலுமுள் ளன, அவற்றிற்கெல்லா மிடைகலை பிங்கலை சுழுமுனையாகிய கோ புரங்கண் மூன்றுள்ளன, அக்கோயிலை யடைப்பதற்கு யானெனதென் னுங் கபாடங்களிரண்டுமுள்ளனவாதலா லக்கோயிலைத்திறந்து வணங் கவல்லார்க்கே யக்கோயிலினுள்ளே குடியிருந்து விளங்கியருளின னென்றவாறு.

திறத்தலாவது யானெனதென்னுங் கபாடங்களை நீக்கிவிடுதல். கோயிலைத்திறந்து கும்பிடலாவது "எனதுயானெனுமால்போதவாரு யிரபேதபாவனைபுரிவஃதே" எனக்கூறிய திருவானைக்காப்புராணம், ஞானவுபதேசப்படலத்திலறிக. (ருகூ)

நாதனிருக்குநடுமண்டபத்துள்ளே
நாதாங்கியில்லாமனுலஞ்சுவாச
லாதாரமேதென்றறியவல்லார்க்கு
வேதாவினோலவீணேலயாமே.

(இ - ள்.) முதலிரண்டடிக்கு - உலகிற்கு நாயகனாகிய வீசுர னிருந்தருளு நடுமண்டபமாகிய காயத்திலே நாதாங்கியுங் கதவுமில் லாமல் நவத்துவாரமாகிய வாசல்களுள்ளன. பின்னிரண்டடிக்கு-இந்த

மண்டபத்துக்காதாரம் யாதோவென்றறிய வல்லார்க்குச் (செனன மரணமின்மையாற்) பிரமன் ஆயுளைவரையறை செய்தெழுதியதுவோலே பயனில்லாதவோலையா மென்றவாறு.

மேலைத்திருப்பாட்டுப்போல இஃதொருவகையாக்கூறி யருளினு ரென்க. * "காயமேகோயிலாக" எனக்கூறல்போல ஈண்டு மண்டபமாகக் கூறினார். காயத்திற்காதாரம் மாயை, மாயைக்காதாரஞ் சத்தி, சத்திக்காதாரஞ் சிவமென்றறிக. இவற்றை முறைப்படி யாராயந் தறிவ தருமையாதலா லறியவல்லார்க்கென்றார். (சு௦)

கண்ணுக்குமூக்குச்செவிஞானக்கூட்டத்திற்
பண்ணுக்கிவைத்தபழம்பொருளொன்றுண்டு
வண்ணக்கினூடேயகண்டவெளிகாட்டிப்
புண்ணுக்கிநம்மைப்பிழைப்பித்தவாறே.

(இ - ள்.) முதலிரண்டடிக்கு - கண்முதலாகிய ஞானேந்திரிய சமூகத்திலே (அவற்றாலிருவினைப்பயனுகரவான்மாவை) யமைத்தல் செய்துவைத்த மூலப்பொருளொன்றுளது. பின்னிரண்டடிக்கு - (அப்பொருளே குருவாகவந்து) அண்ணுகின்ற வாக்காகிய சத்தத்தினுள்ளே விளங்குங் கண்டிக்கப்படாததாகிய பரமாகாசமான தன்னை யறிவிக்குமுறையாகவறிவித்து, நகார மகாரங்களைப் புண்படுத்திக் கெடுத்துய்யச்செய்தவாறே சிறந்தவாறென்றவாறு.

சிறந்தவாறென்பதெஞ்சிநின்றது. கண்முதலியவற்றைக் கூறவே யினம்பற்றி மெய்யையுங்கூட்டிக்கொள்க. பண்ணுத்தல்-ஈண்டமைத்தல். தனக்கு மூலமொன்றின்மையிற் பழம்பொருளென்றார். நாக்கு என்றது ஆகுபெயராய் வாக்கையுணர்த்தியது. சத்தத்தினுள்ளே வெளிகாட்டியென்பதை "சத்தத்தினுள்ளே சதாசிவங்காட்டி" என விநாயகரகவலிலுங் கூறியிருத்தல் காண்க. நகார மகாரங்களிரண்டு முறையே திரோதானசத்தியு மாணவமுமாதலா லவ்விரண்டுங் கெட வேண்டுமாதலால் நம்மைப்புண்ணுக்கியென்றார். இனிப் பிழைப்பித்த வாறுவது யகரமாகிய வான்மாவை வகாரமாகிய வருளாற் சிகாரமாகிய தன்னுடன் கலந்தனுபவிக்கச்செய்தது என விரித்துரைத்துக்

* திருநாவுக்கரசுநாயனுர் தேவாரம், பொது.

கொள்க. நகரமகரங்கள் கெடவேண்டுவதென்பது விளங்கத் துறைசை யந்தாதியினும் "நகரமகரந்தகர்த்தாளிறைவர்க்கு" எனக் கூறியிருத்தல் காண்க. (சுக)

கொட்டியுமாம்பலும்பூத்தகுளத்திடை
யெட்டியும்வேம்புமினியதோர்வாழையுங்
கட்டிப்பூத்தேனுங்கலந்துண்ணமாட்டாதா
ரெட்டிப்பழத்துக்கிளைக்கின்றவாறே.

(இ - ள்.) முதலடிக்கு - ஆன்மாவாகிய கொட்டியும் பதியாகிய வாம்பலு மலர்ந்திருக்கின்ற காயமாகிய குளத்தினிடத்து. இரண்டாமடிக்கு - மாயையாகிய வெட்டியுமாணவமாகியவேம்புந் திரோதான சத்தியாகிய வினியதொருவாழையுமுள்ளன. பின்னிரண்டடிக்கு-உறுதியாகிய வாம்பற்பூத்தேனும் (வாழைக்கனியுங்) கலந்துண்டனுபவிக்க வறியாதார் (மாயாசம்பந்தப்பொருளை யநுபவிப்பது) நல்லதேனுநறுங் கனியுமிருக்க வவற்றையுண்ணமாட்டாது எட்டிக்கனியை யுண்ண விரும்பி யக்கனிக்கு வருந்துகின்றவாறு மென்றவாறு.

"*கரியவாணவந்தேயுமாகவந்தநஞ்சத்தி" என்றும், "தூயவின்னருளாகியேநின்றிடுந்தோகாய்" என்றுங்கூறலாற் றிரோதானசத்தியை யினியதோர் வாழையென்றார். உள்ளன என்பதிசையெச்சம். கலந்தென்றதற்கியைய வாழைக்கனியை வருவித்துரைத்துக்கொள்க.

முக்காதவாற்றினின் மூன்றுளவாழைகள்
செக்குப்பழுத்துத்திரிமாங்காயற்றது
வக்கணரிக்காயிலடங்கினர்கன்னியர்
நக்குமலரடிநடுவினின்றனே.

(இ-ள்.) முதலடிக்கு-அகர வுகரமகரமாகிய முக்காதமுங்கூடிய ஓங்காரமாகியவாற்றின் சம்பந்தத்துடன் றோன்றிய மூன்று வாழைகளாகிய விடைகலை பிங்கலை சுழுமுனைகளுள்ளன. இரண்டாமடிக்கு-ஆணவாதிகளைக்கொண்டு முற்றுணர்ச்சி முதலிய குணங்களும் வியாபகமுமின்றிக் கிடக்கையாற் செக்கு எனப்பெயர் கூறப்பட்ட ஆன்மா அவ் விடைகலை முதலியவற்றாலாய யோகமுதிர்ச்சியாற் சிவஞான

* திருவானைக்காப்புராணம் ஞானவுபதேசப்படலம்.

முதிர மூன்று மாங்காயாகிய தநுத்திரயங்களின் சம்பந்த நீங்கப்பெற்றது. மூன்றுமடிக்கு - நீங்கிய அவ்விடத்து ஆராயுங்கால் ஒளியாகிய சிவத்தில் ஒடுங்கியிருந்தார்கள் பரைமுதலிய பஞ்சகன்னியர்களும். நான்காமடிக்கு - பூசைத்தானமாகிய விதையகமல மலரடி நடுவிலே (அச் சிவமாகிய பரமான்மா) விளங்கிநின்றானென்றவாறு.

எனவே யதிற் கலப்புறுக வென்ப தெஞ்சிநின்றது. அக்கண் வலித்தல் விகாரமாயிற்று. அரி - ஒளி. ஆயில் - ஆராயில். நக்கு - விளங்கி. சிவத்திற் சத்தி யடங்கலால் அரியிற் கன்னிய ரடங்கினரென்றார். பழுத்து பழுக்கவெனத் திரித்துரைக்க. அரிக்கு என்பதிற் குவ்வுருபு மணற்கீன்ற நாணற்கிழங்கின் முளையென்றது போனின்றது.()

கூகையும்பாம்புங்கிளியொடுபூனையு
நாகையும்புள்ளுநடுவிலுறைந்தன
நாகையைக்கூகைநணுகலுறதலுங்
கூகையைக்கண்டெலிகூப்பிடுமாறே.

(இ - ள்.) முதலிரண்டடிக்கு - கூகையாகிய வான்மாவும் பாம்பாகிய வாணவமுங் கிளியாகிய நல்வினையு மதனோடு பூனையாகிய தீவினையு நாகையாகிய சிற்றறிவும் புள்ளாகிய மநாதி யந்தக்கரணங்களுமாகியவிவைகள் மாயை யிடையிற் சந்தித்துறைந்தன. பின்னிரண்டடிக்கு-நாகையாகிய சிற்றறிவைக் கூகையாகிய வான்மாச்சேர்தலும் பந்தத்திலகப்பட்டுக் கூகையைக்கண்டுநடுங்கி யெலிகதறுமாறு துன்புற்றுப் புலம்புவனென்றவாறு.

ஓர் காலறிவு விளங்காமையு மோர்கால் விளங்கலு முடைமைபற்றி ஆன்மாவைக் கூகையென்றும், விடத்திற் பதிந்தவன் மயங்கிக்கிடப்பதுபோல ஆணவத்திலழுந்தி மயங்கிக்கிடத்தலால் அவ் வாணவத்தைப் பாம்பென்றும், மகிழ்ச்சியைத் தருதலால் நல்வினையைக் கிளியென்றும், அருவருப்பு முதலிய குணமுடைமையாற் றீவினையைப் பூனையென்றும், அற்பவுணவை விரும்புதலுடைமையாற் சிற்றறிவை நாகையென்றும், பயனுள்ளவிடந்தேடி நுகரச்செல்லுதலுடைமையால் அந்தக்கரணத்தைப் புள்ளென்று முருவகமாகக் கொண்டுரைத்தாரென்க. புள் - வண்டு. நாகை - ஒரு பறவை. (சஈச)

*அற்றவெளியிலறப்பாழதனி*
*லுற்றபொருளினுணர்வையறியா*
*ருற்றபொருளினுணர்வையறிந்தபின்*
*பெற்றபொருளேபிறவாநெறியே.*

(இ - ள்.) முதலிரண்டடிக்கு-இருவகைப்பற்று மியல்பாகவே யற்றிருக்கின்ற வெளியிற் பெரும்பாழ்போல விளங்குதலுற்ற வானந் தப்பொருளாகிய சிவத்தையறியு முணர்வாகிய சிவஞானத்தை யறி யாரா யிருக்கின்றார்கள். பின்னிரண்டடிக்கு - அங்ஙனமுற்ற பொ ருளையறியு மவ் வத்துவிதமாகுமறிவை யறிந்தபின் அதனாற்பெற்ற பொருளாகிய பயனே முத்திநிலையாமென்றவாறு.

பாழ் எனப் பெயர்கூறுதலைத் திருவானைக்காப்புராணம், ஞான வுபதேசப் படலத்தில் " மன்னுமுப்பாழுமொருவிமேற் பெரும்பா ழெனு முலப்பிலானந்தப் பொருளோடேகமாய்ப்பொருந்திடு முத்த ராயிருந்தார்" எனக்கூறியதனாற் காண்க. இல் - ஒப்புப்பொருட்டு. ()

*ஆயத்துணின்றவறுசமையத்தோருங்*
*காயத்துணின்றகடவுளைக்கண்டிலர்*
*மாயக்குழியில்வழுவாமனைமக்கள்*
*பாயத்துணின்றுபதைக்கின்றவாறே.*

(இ - ள்.) முதலிரண்டடிக்கு - கூட்டத்தினகத்தேநின்ற வறு வகைப்பட்ட சமையத்தோர்களுங் காயத்துள்ளும்(பாலினெய்போலக் கலந்து மறைந்து) நின்ற கடவுளைக் காணுமுறைப்படி கண்டாரில்லை. பின்னிரண்டடிக்கு - (அங்ஙனங்காணாமையால்) மாயமாகிய பிறவிக் குழியினின்று தவறாதழுந்திக்கிடக்கின்ற மனைவிமக்களாகிய அபா யத்துள்ளே (கிடந்து) நடுங்குகின்றவாறுயிற்றென்றவாறு.

ஈண்டு அறுவகைச் சமையமாவன—பாடாணவாத சைவமுதற் சிவாத்துவித சைவமீறாகிய வாறுமாம். அன்றி மாவிரத முதலியனவு மாம். அறுவகைச் சமையத்தோர்க்கு மவ்வவர் பொருளாய் வேறாய் நின்ற பொருளை ஆனைகண்ட குருடர்போற் கண்டுரைத்தமையாற் கண்டிலரென்றார். பாயம் முதற்குறை. இக் கவியைப் புறச்சமை யதூடணமாகவுங் கொண்டுரைப்பர். மனைமக்களைக் கூறவே இனம்

பற்றித் தந்தை தாயுடன்பிறந்தார் பௌத்திரர் முதலானவரையுங் கொள்க; இவர்களை அபாயமென வீண்டுக்கூறல்போலவே திருநாவுக்கரசுநாயனாரும் தேவாரம் பொதுவில் "தந்தையார்தாயாருடன்பிறந்தார் தாரமார் புத்திரரார்தாந்தாமாரே, வந்தவாறெங்ஙனனே போமாறேதோ மாயமாம்" எனக் கூறியருளினமை காண்க. (ருசு)

கத்துங்கழுதைகள்போலுங்கலாதிகள்
சுத்தசிவமெங்குந்தோய்வுற்றுநிற்கின்ற
குற்றந்தெரியாமற்குணங்கொண்டுகோதாட்டிப்
பித்தேறிநாளும்பிறந்திறப்பாரே.

(இ - ள்.) முதலடிக்கு-கலையாதிமண்ணந்தமாகிய வவைகளெல்லாம் ஒரு பயனுமில்லாமற் கதறுகின்ற கழுதைகளை யொத் திழிந்த தரமாயிருக்கும். இரண்டாமடிக்கு - நின்மலமாக விளங்குகின்ற சிவம் பாலினெய்போலத் தெரியப்படாம லெங்குங்கலந்திருக்கின்றது. பின்னிரண்டடிக்கு - (அதனையறியாது) அக்கலையாதி மண்ணந்தமான வைகளைக் குற்றமென்று தெறியாமற்பற்றிக் குணமாகக்கொண்டு பாராட்டி மயக்கமதிகரிக்கப்பெற் றெந்நாளும் வீணாகப்பிறந்திறப்பா ரென்றவாறு.

இஃதோர் கொடுமையிருந்தவா றென்னையென்ப தெஞ்சிநின்றது. கலையாதிமண்ணந்தமானவைகளைச் சிவஞானபோதம், மூன்ருஞ் சூத்திரம் ஏழாமதிகரணத்திற் காண்க. நிற்கின்றது என்றது நிற்கின்ற எனக்கடைக்குறையாயிற்று. (ருஎ)

பாம்புமதியைத்தினலுமப்பாம்பு
தீங்குக்கதிரையுஞ்சேரத்தினலுறும்
பாம்புமதியும்பகைதீர்த்துடன்கொளி
னீங்கல்கொடானெங்நெடுந்தகையோனே.

(இ - ள்.) முதலிரண்டடிக்கு—பாம்பாகிய வாணவமலம் அறிவாகிய வான்மாவை விழுங்கலும் (அதனுடனமையாது) அப்பாம்பு தீங்குக்கதிராகிய பசுஞானத்தையு முடன்றின்னும். பின்னிரண்டடிக்கு-(ஆசாரிய னருண்முறைநின்று) ஆவ்வாணவமு மான்மாவும் அநாதியேபற்றிய பகையைத் தீர்த்து அடக்குமுறையிலடக்கி அத்துவித

பாவனையைக் கொண்டால் உயர்ந்த பண்பையுடையனாகிய பரசிவன் றன்னைவிட்டு நீங்குதலைச் செய்யானென்றவாறு.

அநாதியே ஆணவமலம் பற்றியதென்பதை "மலகன்மமன்றுள வாம்" எனக்கூறிய சிவஞான போதம்-உ-ஆஞ் சூத்திரம்-இரண்டா மதிகரணத் திருவெண்பாவா லறிக. (சூஅ)

திகைக்கின்றசிந்தையுட்சிங்கங்கண்மூன்றுண்டு
நகைக்கின்றநெஞ்சினரிக்குட்டிநாலு
மகைக்கின்றநெஞ்சுளானைகளைந்தும்
பகைக்கின்றநெஞ்சிற்பகையாவருமே.

(இ - ள்.) நான்கடிக்கும் — பந்தமுற்றுத் திகைப்புறுகின்ற ஆன்மாவிற் சிங்கங்களாகிய முக்குணமுள்ளன (இன்னும்) அவ்வான் மாவில் நரிக்குட்டிகளாகிய வந்தக்கரண நான்கும் விளங்குகின்றன (அன்றியும்)வேதனையுறுகின்ற அவ்வான்மாவி லானைகளாகிய பஞ்சப் பொறிகளும் பகைக்கின்றன இவைகளெல்லாம் அவ்வான்மாவிற்கு அநாதியே பகையாவருமென்றவாறு.

இவற்றையறிந்து வெல்வதே யறிவிற்பெரியோர்கடன் என்ப தெச்சமாக வருவித்துரைக்க. பொறி யந்தக்கரணங்கட்கு மேம்பட்டு மூலப்பிரகிருதியின் றோற்றமா யிருத்தலால் முக்குணத்தைச் சிங்க மென்றும், சேட்டை புரிவதனால் அந்தக்காணத்தை நரிக்குட்டியென் றும், களிப்புறுதலாற் பொறிகளை யானைகளென்றுங் கூறினார். ஆன் மாவைச் சிந்தையெனக் கூறியதனைச் "சிந்தையைச் சீவனென்றுஞ் சீவனைச் சிந்தையென்றும்" எனக்கூறிய சிவஞானசித்தியார்-ச- ஆஞ் சூத்திரம்-உஅ-ஆந்திருப்பாட்டி லறிக. (சூகூ)

தண்டேறேறிடித்தலைப்பெய்தயோகிக்கு
மண்டலமூன்றுமகிழ்ந்துடனேத்திடுங்
கண்டவர்கண்டனர்காணார்வினைப்பயன்
பிண்டம்பிரியாப்பிணங்குகின்றாரே.

(இ - ள்.) முதலிரண்டடிக்கு—ஆதாரமாய் நிற்குந் தண்டா கிய சிவசத்தி துணையாகச் சென்று சிவத்தைக் கலந்த யோகிக்குச் சந்திரமண்டலஞ் சூரியமண்டல மக்கினிமண்டல மிம் மூன்றும் வச

மாங்கையினுலே அவை யினிமையுற்றிசைந்திருக்கும். மூன்றுமடிக்கு- அவ்வாறு கண்டறிந்தவரே சிவத்தைக்கண்டு கலந்தவர் அவர் இரு வினைப்பயனை யநுபவித்தறியார். நான்காமடிக்கு—(அவ்வாறறியாத வர்) அவ்வினைப்பயனுகிய சரீரசம்பந்தத்திலகப்பட்டு நீங்காமற் பிணங்கியிருக்கின்று ரென்றவாறு.

தலைப்பெய்த யோகிக்கு நுகரக் கடவனவான வினைப்பயன் களெய்தாமையாற் காணுர் வினைப்பயனென்முர். பிண்டம்-சரீரம். மகி ழுந்துடலொத்திடும் எனப்பாடங் கூறுவர். அது பொருட் சிறப்பின் மையாலது பாடமன்றென்க. (எ0)

பத்துப்பரும்புலியானைபதினைந்தும்
வித்தகரைவர்விநாயகரெண்ம
ரத்தகுமூவராறுவர்மருத்துவ
ரத்தலையைவாமர்ந்துநின்முரே.

(இ - ள்.) நான்கடிக்கும்—தசவாயுவாகிய பத்துப்பெரிய புலி யுந் தன்மாத்திரையு ஞானேந்திரியமுங் கன்மேந்திரியமு மாகிய பதி னைந்து யானைகளும் இவற்றைப் பிரேரேபிக்கிற சிவதத்துவங்களாகி வித்தகரைவரும் ஐவகையவத்தையுந் திரிகாலமுமாகிய விசேட முள்ள நாயகரெண்மரும் அத்தன்மையுள்ள முக்குணமாகிய மூவரும் ஆருதாரங்களாகிய வாறு மருத்துவரும் அவ்விடத்துக்கு முன்னுரிய ஐவகைப்பாசமாகியவை வரும் (பிண்டத்துள்ளே) தங்கிநின்முரென்ற வாறு.

இங்ஙன மிவற்றைப் பகுத்தறிந் திவற்றினியல்பையுணர்ந்து கொள்கவென்பதெஞ்சி நின்றது. இங்குக் கூறிய வுருவகத்திற் றிணை விரவி மிகுதிபற்றி நின்முரென வுயர்திணைமுடிபேற்றது. வாயுவா கிய புலியாதிகளை யாருதாரங்களாகிய மருத்துவரைக்கொண்டு வெல்ல வேண்டுமெனக் கூறினுரென்க. இத்தசவாயு முதலியவற்றியல்பை ஞானமிர்தக் கட்டளையிற்காண்க. (எக)

முன்னிக்கொருமகன்முத்திக்கிருவராம்
வன்னிக்குமூவர்வதுவைக்குநால்வர்
கன்னிக்குவைவர்மின்னுளில்லைகன்னியை
கன்னிக்குக்கன்னிகாதலித்தாளே.

(இ - ள்.) முன்னிக்கொருமகன்—ஆகாசமாகிய முன்னியென் பவளுக்குச் சத்தமாகிய வொருமகனும். முத்திக்கிருவராம்—வாயுவாகிய முத்தியென்பவளுக்குச் சத்த பரிசமாகிய விரண்டு பிள்ளைகளாம். வன்னிக்குமூவர்—அக்கினியாகிய வன்னியென்பவளுக்குச் சத்த பரிச ரூபமாகிய மூன்று பிள்ளைகளாம். வது வைக்கு நால்வர்—அப்புவாகிய வதுவை யென்பவளுக்குச் சத்த பரிச ரூப ரசமாகிய நான்கு பிள்ளைகளாம். கன்னிக்குவைவர்—பிருதிவியாகிய கன்னியென்பவளுக்குச் சத்த பரிச ரூப ரச கந்தமாகிய ஐந்து பிள்ளைகளாம். மின்னுளில்லை கன்னியை—இந்த வைந்து மாதருக்கும் விளங்கிய நாயகரில்லை கன்னிகையாக விருக்கின்றார்கள். கன்னிக்குக்கன்னி காதலித்தாள்—(இவ்வைவரும் பிள்ளைபெற்ற தெவ்வாறென்னில்?) கன்னியைக் கன்னி கூடிப்பெற்றவாறு மென்றவாறு.

இவ்வியப்புணர்க வென்ப தெஞ்சிநின்றது. ஏனைய பூதத்திற்கு முன்னிருப்பதனுன் முன்னியென்றும், அடக்கமுடியாது விட்டுவிடுதலான் முத்தியென்றும், ரூபமுடைமையால் வன்னியென்றும், முக்கியமாய்க் கலந்துகொள்வதனுல் வதுவையென்றும், அழியா நிலையாகக் காணப்படுதலாற் கன்னியென்றுங் கூறினர், மாயையினமிசமாயிருப்பதனு லிப்பூதங்களைக் கன்னியென்றார். இவைகள் சிவசத்திபிரேரிக்க மாயையிற்றோற்றலா லிங்ஙனங் கூறினரென்க. ஆம்-அசை. ()

அநாதிசொரூபியாகியவான்மாத்
தனுதிமலத்தாற்றடைபட்டுநின்றன
றனுதிமலமுந்தடையறநீங்கி
லநாதிசிவத்துடனொன்றுனவாறே.

(இ - ள்) அநாதி—உற்பத்தியில்லாதது. தனுதி—தன்னொடுற்பத்தியாயது. ஒன்றுதல்—அத்துவிதமாதல். ஏனையவற்றை விரித்துரைத்துக்கொள்க. இங்ஙனம் பசு பாச பதி யியல்பைச் சுருக்கிக் கூறியவாறு காண்க. (எங)

போக்குவரவற்றபூரணகாரண
னேக்கவரியனுண்ணியனுண்ணியன்
றேக்குமலத்தன்சிவனுக்குரியவன்
பார்க்கில்வியாபிபலவனுத்தானே.

(இ - ள்.) கடையடி முதலாக வியைத்துரைக்க. ஆராய்ந்து பார்க்கில் வியாபியாகிய பலவாகிய வான்மா நிறைந்த மலத்திலழுந்தி யிருப்பவனுதலால், நாசோற்பத்தியில்லாத பூரணனுகியும், பிரபஞ்ச காரணனுகியும், யாருணர்வானு நோக்குதற் கரியவனுகியு, மிகநுணு கியவனுகியு மிருக்கின்ற பரமசிவனுக் குரியவனுகிய வடிமையாவ னென்றவாறு.

இக்கருத்தைச் சிவஞானபோதத்தில், "நாமல்ல விந்திரிய"மென் னுந் திருவெண்பாவிற்காண்க. அடுக்கு வியப்புப்பற்றி வந்தது. (எச)

காயம்பலகைகயிறைந்துகண்மூன்று
வாயம்பொருவதோரைம்பத்தோரக்கர
.மேயெம்பெருமானிருந்துபொருகின்ற
மாயக்கயிற்றின்மறைப்பறியாரே.

(இ - ள்.) நான்கடிக்கும்—சரீரமே சூதாடுபலகையாகவும்,பஞ் சவிந்திரியமே சூத்திரக்கயிறுகவும், (முக்குணவசமாக நடப்பதனுலே) முக்குணமே மூன்றுகண்ணுகவும், சூதுபொருவதற்குரிய வாயமா கிய வறைகள் ஐம்பத்தொரக்கரமே யாகவும் எம்பெருமானுகிய விறைவன் உலகெங்குமிருந்து சூதுபொருகின்ற மாயச் சூத்திரக் கயிற்றி னிரகசியத்தை (அவனறிவிக்க வறிவாரன்றி) ஏனையோரறி யா ரென்றவாறு.

உயி ரறிவித்தா லறிவதென்பதனைத் திருநாவுக்கரசு நாயனர் தேவாரம் பொது-தனித்திருத்தாண்டகத்தில் "காண்பாரார்கண்ணு தலாய் காட்டாக்காலே" யெனக்கூறியருளியதனுற் காண்க. (எரு)

பன்றியும்பாம்பும்பசுமுசுவானரந்
தென்றிக்கிடந்தசிவகரிகூட்டத்திற்
குன்றுமற்கூடித்தராசுநிறுத்தபின்
குன்றியறிவைக்குறைக்கின்றவாறே.

(இ - ள்.) முதலிரண்டடிக்கு—அகங்காரமுங் காலமு மாயையு மனமுஞ் சிவசாட்சி சம்பந்தமாயிருக்கும் போதில் (இருவினை விளை தற்குக் காரணமாய்) அவைகளெல்லா முரணிக்கிடந்தனவாம். பின் னிரண்டடிக்கு—அவைகள் முரணுது தங்நிலைமையிற் பொருந்தத்

தராசுகோல்போல (இருவினையுஞ்சமனாக) நிலைபெறச் செய்தபின் (தன்னையுந் தலைவனையுந் தெரிந்தவறிவானது பானுவின் விழியெனச் சிவத்துள்ளே) சுருங்குவித்து முறையே யழுத்துகின்ற வாறுமென்ற வாறு.

எனவே, பின்னர்ச் சிவாநந்தமே தினைப்பதென்ப தெஞ்சி நின்றது. கூடி - கூட என்றும், குன்றி - குன்றிவித்தென்று திரித்துப் பொருள்கொள்க. கூட - பொருந்த. குன்றல் - சுருங்கல். அகங்கார முண்மையால் அகங்காரத்தைப் பன்றியென்றும், நியதிநோக்கிப் பற்றலாற் காலத்தைப் பாம்பென்றும், மருட்சியுடைமையால் மாயை யைப் பசுவென்றும், பற்றுந்தன்மை விடாமையால் மனத்தைக் குரங் கென்று முருவகப்படுத்தினாரென்க. முசுவானரம் - ஒருபொருட் பன்மொழி. முசு குரங்கினுளோர்சாதியுமாம். இதனால் இருவினை சமமானாலன்றி அத்துவிதநிலையெய்தாதென்பதறிக. (எசு)

தோட்டத்தின்மாம்பழந்தூங்கிவிழுந்தக்கா
னாட்டின்புறத்தேநரிகளேதின்றிடு
மூட்டிக்கொடுத்தமுதல்வனைமுன்னிட்டுக்
காட்டிக்கொடுத்தபின்கைவிட்டவாறே.

(இ - ள்.) முன்னிரண்டடிக்கு - தோட்டமாகிய மாயாசம்பந்த வுலகிலே மாம்பழமாகிய சரீரமானதுலாவித்தங்கி யந்நிலைகுலைந்து விழுந்துவிட்டால், நாட்டின் வெளியிலுள்ள நரிகள் புசித்துவிடும். பின்னிரண்டடிக்கு - இச் சரீரத்துக்கு வேண்டுங் கருவிகளைமூட்டி நமக்குக்கொடுத்த முதல்வனாகிய பதியை ஞானகுருமூர்த்தி முன் னிலையாக வந்துநின்று காண்பித்துக்கொடுத்தருளியபின்னே (அச் சரீரம் உறங்கினவன் கைப்பொருள்போல) நீக்கியவாறாகுமென்ற வாறு.

ஆதலா லிச்சரீர மிருக்கும்போதே ஞானாசிரியனைத்தேடி முதல் வனை யறிந்துகொள்ளல் வேண்டுமென்பது கருத்தாயிற்று. நரிக ளென்றதற்கு மண்ணுந்தீயுமாகிய நரிகளென்றுரைப்பினுமாம். (எஎ)

கொல்லைமுக்காதங்காடரைக்காத
மெல்லைமயங்கிக்கிடந்தவிருநெறி
யெல்லைமயங்காமலியங்கவல்லார்க்கு
வெல்லைகடந்துசென்றெய்தலுமாமே.

(இ - ள்.) முதலடிக்கு - (விரும்பியடைந் தனுபவிக்குங்) கொல்லை மூன்றுகாதத்தூரமும் (அடையாது வெறுக்கத்தக்க), காடரைக்காததூரமுமாம். இரண்டாமடிக்கு - இவ்விரண்டி னெறியெல்லையை யறியாமல் இவ் விரண்டினையு மொன்றையொன்றாக மயங்கக் கிடந்தன. பின்னிரண்டடிக்கு—அவ்விரண்டி னெல்லையை மயங்காமலறிந் தியங்கவல்லாருக்கு அவ்வெல்லை கடந்து அக்கொல்லையை யடைதலுங் கூடுமென்றவாறு.

கொல்லை யென்றது பதியை; அது பெத்ததசையிற் பாசமாக விருப்பதனால் முக்காதமென நீட்டிப்புக்கூறினார். காடென்றது தநுகரணாதியை; இவை பெத்ததசையிற் பதியாக விருப்பதனா லரைக் காதமெனச் சமீபங்கூறினார். இக்கருத்தைத் துறைசைப் பஞ்சாக்கர தேசிகரந்தாதி முதற்கவியிலறிக. மயங்கி - மயங்கவெனத் திரித்துரைக்க. (எஅ)

எண்ணாயிரத்தாண்டுயோகமிருப்பினுங்
கண்ணாலமுதினைக்கண்டறிவாரில்லை
யுண்ணாடிக்குள்ளேயொளியுறநோக்கினாற்
கண்ணாடிபோலக்கலந்திருந்தானே.

(இ - ள்.) யோகம் - அங்கயோக முதலியன. கண் - ஊனக் கண். உண்ணாடி - சுழுமுனாநாடி. நின்மலபூரணமாயிருத்தலா லதற்குக் கண்ணாடியை யுவமைகூறினார். ஏனையவெளி. அட்டாங்கயோகமாவன - இயமுமுதலாயின. இவற்றினைச் சங்கத்திலச்சிட்டிருக்கிற அட்டாங்கயோகக் குறளினுங்காண்க. (எகூ)

அஞ்சுளசிங்கமடவியுள்வாழ்வன
வஞ்சும்பொய்யஞ்சுந்தம்மஞ்சகமேபுகு
மஞ்சினுகிருமெயிறுமறுத்திட்டா
லெஞ்சாதிறைவனையெய்தலுமாமே.

(இ - ள்.) சிங்கமைந்தென்றது பஞ்சேந்திரியத்தை. அடவி யென்றது அவற்றின் றானங்களையுடைய வுடம்பை. உகிர் - நகம். எயிறு - பல். சிங்கத்திற்கு நகமும் பல்லு மில்லையேற் றன்பஞ் செய்யாதாகையா லவையிரண்டையு மறுத்திடவேண்டுமென்றார். ஏனைய

வெளி. மனத்தையும் புத்தியையு முகிரும் பல்லுமாக வுரைத்தார். ஒருபுலியின் பல்லையு முகிரையுஞ் சேதித்தகதை பாரதத்திற் காண்க.

புலனைந்துளவைந்துபுட்சென்றமேயு
நிலனைந்துநீரைந்துநீர்மையுமைந்து
குலமொன்றுகோல்கொண்டுமேய்ப்பானொருவ
னுலந்துபோம்வழியொன்பதுதானே.

(இ - ள்.) புலமைந்தென்றது பஞ்சபூதத்தை. உளமைந்து புள் என்றது உள்ளத்துடன்கூடிய பஞ்சேந்திரியமாகிய பறவையை. மேயுநிலமைந்தென்றது தன்மாத்திரை யுள்ளவிடத்தை. நீரைந்தென்றது அப்பஞ்சேந்திரியங்களின் குணத்தை. நீர்மையுமைந்தென்றது அவை நுகரும் விடயசுகத்தை. குலம் - சாதி, நன்மையுமாம். மேய்ப்பானென்றது ஊட்டுவிப்பானாகிய கர்த்தாவை. உலந்து - துன்புற்று. வழியொன்பது. நவத்துவாரம். ஏனைய வினைத்துரைக்க. இவ்வொன்பது வழியிருந்து மோடிவிடாமல் மேய்ப்பானுக்கினைப்படி யொடுங்குங்காலத் தொடுங்கி வெளிப்படுங்காலத்தில் வெளிப்படலால் இவ்வியல்பை யறியவேண்டுமென்பதெஞ்சி நின்றது. (அக)

மூன்றுளமாளிகைமூவரிருப்பிட
மூன்றினின்முப்பத்தாறுமுதிப்புள
மூன்றினுள்ளேமுளைத்தெழுஞ்சோதியைக்
கான்றிடிற்காயங்கணக்கற்றவாறே.

(இ - ள்.) மூன்றுளமாளிகை - அகார உகார மகார மாகிய மூன்று மாளிகையுள்ளன. மூவரிருப்பிடம் - அம்மாளிகை மூன்று மயனரியரனென்னு மூவரிருப்பிடமாம். இரண்டா மடிக்கு - அவ்வகார முதலிய மூன்றிள்ளே முப்பத்தாறு தத்துவங்களுந் தோன்றுதலுள்ளன. மூன்றுமடிக்கு - அவ்வகாரமுதலிய மூன்றினுள்ளே நின்று மேலாய் முளைத்தெழுஞ் சோதியாகிய சிவத்தை. கான்றிடில்- அறியாதுவிடில். காயங்கணக்கற்றவாறே - இருவினையால் வருமுடம்பு மாறிமாறிக் கணக்கில்லாமலுண்டாகு மென்றவாறு.

அகாரமுதலிய மூன்றிற்கு மதிதெய்வமாயிருத்தலின் அவை மூன்றையு மூவரிருப்பிடமென்றார். முப்பத்தாறு கருவிகளு மிங்

நுனந்தோன்று மென்பதைத் திருவிளையாடற்புராணம் - வேதத் துக்குப் பொருளருளிச்செய்த படலத்தில் - "ஆதியிலான்மதத்துவ மான" என்னுஞ் செய்யுளிலுங்காண்க. மூன்றினுள்ளே முளைத் தெழுஞ்சோதியென்றது அம்மூன்றினுள்ளே நின்றும் பிரணவ மைந்தக்கரமாதலால் அவ்வைந்தக்கரத் தெய்வங்கட்கு மேலாயெழுஞ் சோதியையெனினுமாம். இதனைச் சிவஞானசித்தியார் - ச - ஆஞ் சூத்திரம் - ந - ஆந் திருப்பாட்டிலறிக. (அஉ)

மொட்டித்தெழுந்ததோர்மொட்டுண்டம்மொட்டினைக்
கட்டுவிட்டோடிமலர்தலுங்காணலாற்
பட்டுவிட்டம்மனைபாழ்படநோக்கிட்டுக்
கட்டுவிட்டார்க்கன்றிக்காணவொண்ணதே.

(இ - ள்.) நான்கடிக்கும் - (இதயத்திலே வாழைப்பூப்போலக் கீழ்நோக்கி) முகிழ்த்தெழுந்தவொரு அரும்புளது, அவ்வரும்பினில் முறுக்கவிழ்ந்து விசாலித்து விரிதலும், அங்கே சோதிமயமாகச் சிவந்தோன்றலால், அதனைப்பிறவிக்கிடமாய தாய் பட்டு நீங்கிப் பாழ் பட நோக்கிப் பந்த நீங்கினர்க்கன்றி யேனையோர்க்குக் காணமுடியா தென்றவாறு.

இதயத்தி லிம்மலருண்டென்பதனைச் சிவஞானசித்தியார் - கூ - ஆஞ் சூத்திரம் - அ - ஆந் திருப்பாட்டிற்காண்க. மொட்டினை— உருபுமயக்கம். அம்மனை - தாய். (அந)

கரடிகளொந்துங்கடுங்கானம்வாழ்வன
திருடியிராப்பகறின்றுதிரிவன
கரடிகளொந்துங்கடைத்தலைபட்டாற்
குருடிகள்குத்தினுங்குண்டுரலாமே.

(இ - ள்.) முதலிரண்டடிக்கு-கரடிகளாகிய பஞ்சேந்திரியங்க ளுங் கொடுங்காடாகிய தேகத்தில் வாழ்ந்திருக்கின்றன, அவை தமக்குரியவையன்றிப் பிறர்க்குரியவற்றையு மபகரித்து இராப்பகல் துய்த்துச் சரிப்பன. பின்னிரண்டடிக்கு - அக்கரடிகளாகிய விந்திரி யங்க டம்மிடங்களிற் செயலற்றொடுங்கினல், குருடிகளாகிய விருவினை கள் வந்துதாக்கினு முரண்டைக்கல்லுரல்போ லச்சமில்லை யென்ற வாறு.

தாமே செல்லுகையின்றி நியதியின்வழியாகச் சேறலாற் குருடிகளென்றார். இந்திரிய நிக்கிரகஞ் செய்தவர்க்கு வினைகள் வந்து தாக்கினு மவற்றாற் சலனமில்லை யென்பது கருத்தாயிற்று. விடாது பற்றலா லிந்திரியங்களைக் கரடிகளென்றார். சலனமில்லை யென்பதனைச் சிவஞானசித்தியார் கo-ஆஞ் சூத்திரம்-ரு ஆந் திருப்பாட்டில், "வருஞ் செயல்க ளுண்டேன், முந்தனுடைச் செயலென்று முடிந்தொழுக வினைகண் மூளா" எனக் கூறியதனாற்காண்க. (அச)

விச்சுக்கலமுண்டுமேலைச்செய்யொன்றுண்டு
வுச்சிக்குமுன்னேயுழவுசமைந்தது
வச்சைக்கொண்டச்சையறுத்துண்ணறியாம
லிச்சைக்குப்பிச்சையிரக்கின்றவாறே.

(இ - ள்.) வித்து என்றது அறிவை. செய் என்றது அருட்சத்தியை. உச்சி என்றது பாதிவேளையினை; அது ஐம்பதுவயது என்க. உழவு என்றது சரியைமுதலனைத்தும். அச்சு என்றது இச்சரீரத்தை. அச்சையறுத்தல் - இனிவருஞ் சரீரத்தை நீக்கலே. உண்ணுதல் என்றது விளைந்த சிவானந்தவமுதந்துய்த்தலே. ஏனையவியைத்துரைக்க.

இரக்கின்றவாறு என்றதன்பின் இதனாற் பயனில்லை யென்பது வருவித்துரைக்க. ஐம்பதுவயதிற்குப் பின் கருவிகள் வரவர வோய்வுபெறுதலால், அதற்கு முன்னே சரியை முதலியவற்றைச் சாதித்துச் சிவானந்தவமுதந்துய்த்தல் வேண்டுமென்பது கருத்தாயிற்று. "முப்பதா மாண்டளவின் மூன்றற் றொருபொருளைத், தப்பாமற் றன்கைப் படாளுகில்" எனக் கூறுதலுங்காண்க. இதிற் "காலமுண் டாகவே காதல்செய் துய்ம்மின்" என்றுரைத்தருளிய திருவாசகத்திருப்பாட்டின் கருத்தடங்கி யிருத்தல்காண்க. உண்ண என்பது விகாரமாயிற்று. (அரு)

உச்சிக்குமேலேயுணர்வுக்குங்கீழே
வைச்சபொருளின்வகையறிவாரில்லை
வைச்சபொருளின்வகையறிவாளர்க்கு
வெச்சவெருதுமிளவெருதாமே.

(இ - ள்.) முன்னிரண்டடிக்கு - மாயைக்குமேலே ஞானரூப மாகிய பதிக்குங்கீழே ஆகிய நடுவிலே வைத்திருக்கப்பட்ட பொருளாகிய வான்மாவின் வகையையறிவாரில்லை. பின்னிரண்டடிக்கு - அங்ஙனம் வைத்த பொருளாகிய வான்மநிலையை யறிதலுடையார்க்குத் (தன்னையறிந்தவரே தலைவனையு மறிவாரென்ற பழமொழிப்படி) தலைவனையறிதல் கூடுமாதலால், அவ்விடத்தேயிளைத்தோய்ந்த எருதுகளாகிய கருவிகளெல்லாஞ் சிவகரணமாகையால் இளமைத் தன்மையுடைய வெருதுகளைப்போலச் செய்தொழிற்பய னுதவுவனவா மென்றவாறு.

கருவிகளை யெருதுகளாகக் கூறினமையாற் சரியை முதனான்கையு முழவுதொழிலாகக்கொள்க. எல்லாத்தத்துவங்கட்கு மேலாதலேக்கி மாயையினையுச்சி யென்றார். (அசூ)

வம்புபழுத்தபலாப்பழமொன்றுண்டு
தன்பாற்பறவைபுகுந்துணத்தாணொட்டா
வம்புகொண்டெய்திட்டகலத்துரத்திடிற்
செம்பொற்சிவகதிசென்றெய்தலுமாமே.

(இ - ள்.) முதலடிக்கு - புதுமையாகப் பழுத்த சிவகதியாகிய பலாக்கனி யொன்றுளது. இரண்டாமடிக்கு - அதனிடத்துப் புகுந்துண்ணப் பஞ்ச விந்திரியங்களாகிய பறவைகள் தம்வயமாக்கித் தடுத்துக் கூட்டமாட்டா. மூன்றாமடிக்கு-ஞானமாகிய வம்பினைக்கொண்டு அவ் விந்திரியங்களாகிய பறவைகளை யெய்து தூரத்தே நீக்கிடில். நான்காமடிக்கு - செம்மையுடைய வழகிய சிவகதியாகிய வப் பலாக்கனியை யடைந்து துய்த்து வாழலுமாகு மென்றவாறு.

இதுகாறுங் கிட்டாது கிடைத்ததோர் திப்பியமாகிய கனியென்பார் வம்புபழுத்த பலாப்பழமொன்றென்றார். இதில் ஓரினவெதுகை வந்தவாறு காண்க. (அஎ)

பள்ளச்செய்யொன்றுளபாடச்செயிரண்டுள
கள்ளச்செயங்கேகலந்துகிடந்தது
வுள்ளச்செயங்கேயுழவுசெய்வார்க்கு
வெள்ளச்செயங்கேவிளைந்ததுதானே.

(இ - ள்.) பள்ளச்செய்யொன்று என்றது காரணதநு, சூக்குமதநு, தூலதநு என்னு மூன்றனுள்ளே காரணதநு ஏனையிரண்டு தநுவுக்கு முள்ளிருத்தலாலதனைப் பள்ளச்செய்யென்றார். உள - அதன்பின்னுள்ளனவாகிய. பாடச்செயிரண்டு என்றது அதனினின்றுந் தோற்றுவிக்கப்பட்டமையாற் சூக்குமதநு, தூலதநு இரண்டையும் பாடச்செய்யென்றார். இரண்டாமடிக்கு - கள்ளச்செய்யாகிய மாயை அத் தநுத்திரயங்களையுட்கொண்டு கலந்திருந்தது. மூன்றாமடிக்கு - உள்ளுகின்ற அச் செய்களினிடத்தே இவைகளைப் பொய்யெனக் காணுதலாகிய வுழுதொழிலைச்செய்யு ஞானியர்க்கு. நான்காமடிக்கு-மிகுதியாகிய அச் செய்களினிடத்தே நின்று தானே சிவமாகுதலாகிய விளைவு விளைந்தது என்றவாறு.

முதலில் உளது என்பது துவ்வீறு குறைந்து நின்றதெனினுமாம். சிவமாகுதலாகியவிளைவு வருவித் தியைத்துரைக்க. (அஅ)

அன்னமிரண்டுளவாற்றங்கரையினிற்
றுன்னியிரண்டுந் துணைபிரியாதென்க
வந்நிலையன்னந்தனியொன்றுபோனக்காற்
பின்னைமுடவன்னங்கூடுகிலாவே.

(இ - ள்.) முன்னிரண்டடிக்கு - தமக்காதாரமாகிய வாற்றங்கரையைப் பிரியாம லிரண்டன்னங்களிருப்பனபோல இடைகலை பிங்கலையாகிய வந்நிலையையுடைய வன்னமிரண்டுந் தமக்குச் சார்பாகிய சுழுமுனையைச்சேர்ந்து பிரியமாட்டாதென்க. தனியொன்றுபோனக்கால் - தனியாகிய வோர் சுழுமுனை யடங்கினால். கடையடிக்கு-பின்பு நடையில்லாமையாலே முடவன்னம் போலாகி யவை சேரமாட்டாவென்க.

இரண்டும் என்பதனோடு அந்நிலையன்னம் என்பதனைக் கூட்டியுரைக்க. ஓரினவெதுகை யிதில் வந்தவாறு காண்க. (அகூ)

மலமில்லைமாசில்லைமானபிமானக்
குலமில்லைகொள்ளுங்குணங்களுமில்லை
நலமில்லைநந்திஞானத்தினாலே
பலமன்னியாங்கேமதித்துவைப்பார்க்கே.

(இ - ள்.) நந்திபெருமானாகிய குருமூர்த்தி யருளிய பராஞானத்தினாலே கண்டபொருளை நிலைபெற விளங்கக் கண்டவிடத்தே சிந்தித்து வைப்பார்க்கு, ஆணவமுதலிய மும்மலமில்லை, அவையடுத்து வருங்கருவிகளுடனஞ்ஞானமுமில்லை, அஃதில்லையாகவே, அதுகாரணமாக வரு மானவபிமானத்துடன் கூடிய குலவேற்றுமையில்லை, மாறி மாறிக்கொள்ளுங் குணங்களுமில்லை, அம்முக்குணங்க ணீங்கவே விடயசுகமுமில்லை யென்றவாறு. நந்தி என்பது முதலாவுரைக்க.

கண்டபொருளை யென்ப திசையெச்சமாக்கி யுரைக்க. மன்னி - மன்ன வெனத் திரித்துரைக்க. மானாபிமான மென்பது மானபிமானம் என நின்றது. நலம் ஈண்டு விடயசுகம். அருளியஞானமாவது, சிவஞான சித்தியார்-௮ - ஆஞ் சூத்திரம் - ௩௰ - ஆந் திருப்பாட்டிலும், மலமில்லை யென்பது முதலியனவற்றை ௩௨ - ஆந் திருப்பாட்டிலுங் காண்க. (௧௦)

பழுத்தனவைந்துபழமறையுள்ளே
விழித்தங்குறங்கும்விளைவையறியா
ரெழுத்தறிவோமென்றுரைப்பர்களேதா
மெழுத்தையழுத்துமெழுத்தறியாரே.

(இ - ள்.) பழைய வேதாகமத்துள்ளே ஐந்தெழுத்து மேலோங்கி யிருக்கின்றன, (அவைகளை யைந்தவத்தையினு நிற்குமுறை யறிந்து பின்) துரியாதீதத் துறங்கும் விளைவை யறியார்கள். அவ் வெழுத்துக்களை யறிவோமென் றுரைப்பார்கடாம், ஏனை யெழுத்துக்களைத் தன்னு ளமைப்பதாகிய முத்தி பஞ்சாக்கர நிலைமையை யறியாரென்றவாறு. முதலடிமுதலாக வியைத்துரைக்க.

பழுத்தல்-எல்லாச் சமையங்களுள்ளுங் கூறப்படும் பொருளெல்லாந் தம்முளடக்கி மேலோங்கியிருத்தல். இத் திருப்பாட்டின் கருத்தைக் காஞ்சிப்புராணம் - பாயிரத்தில், "எவ்வெவகோட்படுபொருளும்" என்னுஞ் செய்யுளிற் காண்க. ஐந்தவத்தையினுங் கணிக்குமுறையை யுபதேசமுறையானுணர்க. (௧௧)

முத்துப்பவளம்பச்சையென்றிவைமூன்று
மொத்துப்புணருமுணர்வையறியா

ரொத்துப்புனேருமுணர்வையறிந்தபின்
கொத்துப்படுங்கொக்குப்போற்குருவாமே.

(இ - ள்.) அகார முகார மகாரமென்ற இவை மூன்று மோங்காரமாகப் பொருந்த அவற்றின் மேலாகப் பொருந்தியிருக்கு முணர்வாகிய பதியை யறியார்கள்; அங்ஙனமாகப் புணரு முணர்வாகிய பதியை யறிந்தபின் றான் கருதியிருந்ததை யகப்படக் கொத்துதல் பொருந்துங் கொக்குப்போல வாசாரியராவ ரென்றவாறு. முதலடி முதலாகவுரைக்க.

முத்து உருத்திரவடிவமும், பச்சை திருமால் வடிவமும், பவளம் பிரமன்வடிவமும் பெற்றிருத்தலால் அவைகளை யெடுத்துக் கூறினர். செய்யுளாதலின் முறைபிறழக் கூறினர். அகரத்திற்குப் பிரமனையும், உகரத்திற்குத் திருமாலையும், மகரத்திற்கு ருத்திரனையும் பொருளாகக் கூறலினிங்ஙனம் விதந்து கூறினர். என்றவிவை யென்பது என்றிவை யென நின்றது. ஒத்து ஒக்கவெனத் திரித்துரைக்க. (௬௨)

பண்ணுதபேரொளிக்கப்புறத்தப்புற
மெண்ணுயகனரிசைந்தங்கிருந்திட
முன்னுவெளியதுரைசெயாமந்திரஞ்
சொன்னான்கழன்முன்னறிந்தமர்ந்தோமே.

(இ - ள்.) சன்மார்க்கராய ஞானியரெண்ணத்தில் விளங்கிய தலைவராகிய அவரிசைந்திருந்த அவ்விடம் பிறராற் பண்ணப்படாத பெரிய சோதியின் மேலாகிய விடமாம்; (அத்தலைவரை யின்னும்) உன்னுதற்கரிய பரமாகாசமாயுள்ள தென்றும், சொல்லுதற்கரிய இரகசியமாயுள்ளதென்று முன்னே யுபதேசித்தருளின நந்திபெருமான்றிருவடி யவ்வாறிருப்பதை யறிந்து அதனுட்பிரிப்பின்றியத்துவிதமாயடங்கினே மென்றவாறு. இரண்டாமடி முதலாக வுரைக்க.

இனிப்பெறும்பே றில்லையென்ப தெஞ்சிநின்றது. வாக்குமனாதீதமாதலால் உன்னுவெளியதுரைசெயாமந்திர மென்றார். இருந்தவிடம் என்பதிற் பெயரெச்ச வீறு தொக்கது. உரைசெயா மந்திரமென்பதற்கு அசபாமந்திரமெனப் பொருள்கூறலுமொன்று; அது வருமாறு, அதனை அஞ்சமந்திர மெனவும், அன்னபபெயர்மந் திரமெனவுங் கூறுவர். காஞ்சிப்புராணம் - திருவேகம்பப் படலத்தில் -

"காயத்திரியதனிலதிக மஞ்சமாமந்திரம்" என்றும், பிரபுலிங்கலீலையில் "அறிவோர் சிறிதுஞ் சலியாமலன்னப் பெயர்மந் திரமாறி" என்றுங் கூறுமாறுகாண்க. அது, நான் அவன் எனப் பொருள்படு மந்திரம். ஹம் ஸ: - அஞ்ச என்றாயிற்று. அவன் நான் எனப் பொருள்படும் (சோகம்) ஸோஹம் என்பது எழுத்து மாறி ஹம்ஸ: என்றாயிற்று. ஜபா - செபித்தலுடையது. அஜபா செபித்தலில்லாதது. மதுரைத்தமிழ்ச்சங்கத்திலச்சிட்ட தமிழ்ச்சொல்லகராதியில் இதன் விரிவைக்காண்க. (கங)

பாருக்குக்கீழேபகலோன்வரும்வழி
யாருக்குமெட்டாவகலமுடையவ
னீருக்குந்திக்குநடுவேயுதித்தவ
னூருக்குமேற்கேயொடுங்குகின்றானே.

(இ - ள்.) ஆன்மாத் தோன்றும் வழியாவது பிருதிவியன் கீழாகிய மாயையேயாம், (ஈசுரன் அரியகாட்சியனாதலால்) பெத்தான்மாக்கள் யாவருக்கு மணுகவொண்ணாத தூரநிலையினேன், அங்ஙனமான்மா எவ்வாறு தோன்றினானெனில்? சுக்கில சுரோணித சேர்க்கையினிடையிலே தோன்றினவனாவான், அவன் முத்திநிலையிலெங்கேயொடுங்குகின்றானெனில் ? மாயையாகிய வூருக்குமேலிடமாகிய அவ் வீசுரனிடத்திலத்துவிதமாயொடுங்குகின்றானென்றவாறு. முதலடி முதலாகவுரைக்க.

அகக்காட்சியாகி ஞானத்தாலஞ்ஞான விருளை நீக்கலால் ஆன்மாவைப் பகலோனென்றார். நீர் வெண்ணிறமுந் தீ செந்நிறமுமுடைமையாற் சுக்கில சுரோணிதத்தை நீருந்தீயுமாகக் கூறினார். வரும் வழி மாயையெனக் கூறியது "மாயாதநுவிளக்காமற்றுள்ளங் காணாதே, லாயாதாமொன்றை" எனச் சிவஞானபோதம் ச-ஆஞ் சூத்திரம் - உ - ஆ மதிகரணத்திற் கூறியதனாலென்க. (கச)

ஆரைபழுத்துக்கிடக்குதுவையக
மாரையைச்சூழநீர்கோத்துநிற்குது
வாரைபறித்துக்கறியுண்ணமாட்டாது
கீரைக்குநெல்லிட்டுக்கெடுகின்றவாறே.

(இ - ள்.) உலகில், சிவமாகிய ஆரைக்கீரை பறிப்பாரரியாக முதிர்ந்திருக்கின்றது, அவ்வாரைக்கீரைக்கு அருளாகிய நீர் என்றும்

பெர்ருந்தியிருக்கின்றது. அவ்வாரைக்கீரையைத் தன்னுட் கொண்டமைத்துச் சிவஞானத்தா லத்துவித நிலையாகிய கறியையமைத்துண்ணவறியாமற் பூமியிற்றோன்றிய வெறுங்கீரைக்கு நெல்லைக்கொடுத்து வாங்கியுண்டு அவமே காலங்கழித்துத் தொலைகின்றவாறு யாது காரண மென்றவாறு. முதலடி முதலாக வுரைக்க.

யாதுகாரண மென்பதெஞ்சிநின்றது. இது அநித்தியமாகிய கீரையையுண்டு காலங்கழிப்பாரை நோக்கி யிங்ஙனங் கூறினரென்க. கீரைகளில் ஆரைக்கீரை யுயர்வுடையதென்ப துலகவழக்கு. (கூரு)

ஐவர்க்கொருசெய்விளைந்துகிடந்தது
வைவருமச்செய்யைக்காத்துவருவார்க
ளைவர்க்குநாயகனோலைவருதலா
லைவருமச்செய்யைக்காவல்விட்டாரே.

(இ - ள்.) ஐவர் என்றது பஞ்சேந்திரியத்தை. ஒரு செய் என்றது வினையை. விளைந்து கிடத்தலாவது-வினைப்பய னுகரக்கிடத்தல். செய்யைக்காத்து வருதலாவது - அவ் வினையைப் பிறர் நுகராமல் நியதியின்படி தாங்களே நுகரப்பார்த்திருத்தல். ஐவர்க்கு நாயகன் என்றது ஐவரையுஞ் சேட்டிப்பிக்கும் பதியை. ஓலை என்றது இத்தேகத்தா னுகரக்கிடந்த வினைப்பயனற்றபடியால் எஞ்சிய வினைப்பயனுகர வேறு தநுவாதியைக் கொள்ளுமாறு வரு மிறைவனாணையை. அச்செய்யைக் காவல்விடல் என்றது அவ் வினையைத் தாம் நுகராமல் விடல்.

இதன் கருத்து "வினைப்போகமேயொருதேகங்கண்டாய்வினை தானொழிந்தாற் - றினைப்போதளவுநில்லாதுகண்டாய்" என்ற பட்டினத்தடிகள் பாடற்கருத்துப்போற்கொள்க. ஆதலா லித்தேகமிருக்கும்போதே அந் நாயகன் றிருவடிக்கலப்பைப் பெறவேண்டு மென்பதெஞ்சிநின்றது. (கூசு)

கரும்புந்தேனுங்கலந்ததோர்காயத்தி
லரும்புங்கந்தமுமாகியவானந்தம்
விரும்பியேயுள்ளம்வெளியுறக்கண்டபின்
கரும்புங்கைத்ததுதேனும்புளித்ததே.

(இ - ள்.) ஆன்மாவானது, கரும்பு மத னிரசமாகியதேனும், அரும்பு மதன்மணமுங் கலந்ததை யொத்திருக்கின்ற வானந்தத்தை ஒரு காயத்தினுள்ளே பரவெளியிற் (சிவஞானத்தாற்) காதலித்து அத்துவிதமாகப் பொருந்த வறிந்தபின்னர்க் கரும்புங் கசந்துவிட்டது, தேனும் புளித்துவிட்ட தென்றவாறு. உள்ளமென்பது முதலாக வியைத்துரைக்க.

இத் திருப்பாட்டு, அணைந்தோர் தன்மைகூறியதனுல் அவர்க்குலகிய லின்ப மித்தையா யிருத்தல்பற்றி யிவ்வாறு கூறினரென்க. உள்ளம் - ஆன்மா. ஆதல் - எண் டொப்புப்பொருட்டு வெளி - பரமாகாசம். ஏ - அசை. (கூஎ)

நினைப்புமறப்புமிலாதவர்நெஞ்சம்
வினைப்பற்றறுக்கும்விமலனிருக்கும்
வினைப்பற்றறுக்கும்விமலனைத்தேடி
நினைக்கப்பெறிலவனீளியனுமே.

(இ - ள்.) முன்னிரண்டடிக்கு - தன்னையணைந்தோர் வினைப்பற்றை நீக்கு மலமுத்தன் அறிவு மறியாமையுமாகிய நினைப்பு மறப்பு மற்றவராகிய மெய்ஞ்ஞானியரது இதயகமலத்தில் (ஞானகாசமாகிய சோதியாய்) இருப்பன். பின்னிரண்டடிக்கு-அவ்வாறு வினைப்பற்றை நீக்கு மலமுத்தனை நினைப்பு மறப்பு மறுமற் றேடிச் சிந்திக்கப்பெறிலவர் நினைவி லகப்படானுகி யவன் றாரத்தவ னுவனென்றவாறு.

அறிவு மறியாமையு மகற்றியதுணையானே (அறிவினுள்ளே யப்பவல்தாரு குறி குருவருளினுலறிதல்) கூடுமாதலி னதனை யூகித்தறிய முன்னிரண்டடியி லவ்வாறு கூறினரென்க. (கூஅ)

பூதக்கண்ணுடியிற்புகுந்திலன்போதுளன்
வேதக்கண்ணுடியில்வேறேவெளிப்படு
நீதிக்கண்ணுடிநினைவார்மனத்துளன்
கீதக்கண்ணுடியிற்கேட்டுநின்றேனே.

(இ - ள்.) முன்னிரண்டடிக்கு - பூதவிகாரமாகிய லோகங்களாகிய கண்ணுடியிலே முகமுதலிய பெரியவடிவங்களின்சாயை யுள்ளடங்கி விளங்குமாறுபோல, வேதமாகிய கண்ணுடியி னுட் புகுந்

தோன்றுனும் வேதாந்தப்பொருளாய்த் தனியே வெளிப்பட்டுத் தோன்றுவன், அவ னெக்காலமுமுள்ளான். பின்னிரண்டடிக்கு-(இங்ஙனமுள்ளனுயினும்) அவ்வேதநீதியாகிய கருமஞான முறைப்படியாராய்ந்து சிந்திப்பா ரிதயகமலத்து விளங்கித் தோன்றுவன், (இவ்வியல்ப்பயெல்லாம்) இசையுடைய அவ்வேத நூலாகிய கண்ணுடியில் (செவியாகிய கண்ணுல்) அறிந்து நின்றேனென்றவாறு.

வேத மிதுவே பிரமமெனச் சுட்டிக்காட்டப் பெறுமையால் அதனுட் புகுந்திலனென்றும், வேதாந்தப்பொருளா யிருத்தலில் வேறே வெளிப்படுமென்றுங் கூறியவாறுணர்க. கீதம் என்பது ஆகுபெயராய் வேதநூலை யுணர்த்திநின்றது. (கூகூ)

மண்ணிற்கலங்கியநீர்போன்மனிதர்க
ளெண்ணிற்கலங்கியிறைவனிவனென
ருண்ணிற்குளத்தின்முகந்தொருபால்வைத்துத்
தெண்ணிற்படுத்தச்சிவனவனுமே.

(இ - ள்.) முன்னிரண்டடிக்கு—நிலத்தியல்பாற் றிரிந்த நீர் போல மாயாசம்பந்தத்தா லெண்ணத்திற் கலக்கமுற்று (உண்மை விளங்காமையால்) இறைவ னிவனென் றறியமாட்டார். பின்னிரண்டடிக்கு - உள்ளேநிற்கு முளமாகிய இதயகமலத்தி லொரு பாலாகிய பொருளை முகந்துவைத்துக் கேட்டுச் சிந்தித்தபடியே தெளிவு நிற்றல்செய்ய அவனே நிட்டைகூடிச் சிவனுயிருப்பனென்றவாறு.

மண்ணுல் நீர் திரியுமென்றதனை "நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகும்" எனக்கூறிய திருக்குறளிற்காண்க. பால் - என்பது இயல்பு; "பால்புடை யியல்பு திக்குப் பகுத்தல்பா லென்னு மைம்பேர்" என நிகண்டிலுங் கூறுதல்காண்க. முகத்தல் - ருண்டுபேதபாவனையைக் குறித்து நின்றது. (கoo)

முற்றிற்று.



உ

# பிழை திருத்தம்.

திருமந்திர நூறுபாட்டுக்குரையின் முகவுரையிலிருந்து தொடுத்து ௪, ௫, ௬, ௭, ௮-ஆவது பக்கங்களில் ௨, ௩, ௪, ௫, ௬, எனப் பதிக்கப்பட்டிருக்கிற பக்க எண்களை முறையே ௪, ௫, ௬, ௭, ௮, எனவும், கடைசிப் பக்கத்தின் எண்ணை ௬௮ எனவும் திருத்திக் கொள்க.